# கட்டுரைக் கொத்து

எழுதியவர் :
பேராசிரியர்
**வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், M.A., B.O.L.,**
*தமிழ்த்துறைத் தலைவர்,*
*புதுக்கல்லூரி, சென்னை-14.*

நூல் கிடைக்கும் இடம் :
**அம்மையப்பர் அகம்,**
**43, விஜயவிக்னேஸ்வரர் கோவில் தெரு,**
**தூளை, சென்னை-7.**

 1966 [விலை ரூ. 2-50.

# முகவுரை

பூக்கள் ஒன்ருேடொன்று இணைந்து காணப்பட்டால் அதனைப் பூங்கொத்து என்கிருேம். அதுபோல இந்நூலில் கட்டுரைகள் பல இணைந்து இருத்தலின் இது "கட்டுரைக் கொத்து" என்னும் பெயருடன் திகழ்கிறது.

இந்நூலில் காணப்படும் கட்டுரைகள் அனைத்தும் என்னுல் எழுதப்பட்டவைகளே. ஆனுல், இவை யாவும் ஒரே சமயத்தில் எழுதப்பட்டவை அல்ல. இவை பல்லாண்டுகட்கு முன்பு அவ்வப்பொழுது திங்கள் தாள்களிலும், நினைவு மலர்களிலும், ஆண்டு மலர்களிலும் வெளிவந்தவை. நான் எழுதியுள்ள நூல்களில் இருக்கும் கட்டுரைகளும் இதில் இடம்பெற்றுள்ளன

திருமணம், உமறுப்புலவர் உணர்த்திய பாலை என்னும் கட்டுரைகள் முறையே டெல்லித் தமிழ்ச்சங்கத் திரு. வி. க. மலரிலும், திருநெல்வேலி உமறுப்புலவர் நினைவு மலரிலும், குறள் தரும் இன்பம் என்பது புதுக்கல்லூரி ஆண்டு மலரிலும், ஒத்த கருத்துடைய ஒப்பிலாச் சான்ருேர், தமிழக விழாக்கள், திருப்பாட்டின் திறன் என்பன குமர குருபரன் என்னும் திங்கள் தாளிலும் வெளிவந்தவை

கபிலர், தூது, கிறித்தவர் தமிழ்த்தொண்டு, செல்வத்தின் சிறப்பு, காவற்பெண்டு, அழகைத் துறந்த அணங்கு என்பன முறையே, என்னுடைய சங்கச்சான்ருேர், தூது சென்ற தூயர், தமிழ்நூல் வரலாறு, பணத்தின் மாண்பு, தொழிலும் புலமையும், வையம் போற்றும் வனிதையர் என்னும் பெயரிய நூலினின்று எடுக்கப்பட்டவை.

இக்கட்டுரைகளைப் படிக்கும்போது, படிப்பவர்கள் இலக்கியச் சுவையினையும் இனிதின் நுகர்தல் பொருட்டும் எழுதிய கருத்துக்களை உறுதிப்படுத்த வேண்டியும் பல செய்யுட்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. இதனுல் மூல இலக்கியங்களைப் படிக்கவேண்டும் என்னும் அவா படிக்கின்றவர்கட்கு எழும் என்பது எனது கருத்து.

இன்னேரன்ன முறையில் வெளிவரும் இக்கட்டுரைக் கொத்தினைத் தமிழ் உலகம் ஏற்று, என்னை இத்துறையில் மேன்மேலும் ஊக்கி ஆக்கம் அளிக்குமாறு வேண்டிக்கொள்கின்றேன்.

"அம்மை அப்பர் அகம்"
43, விஜயவிக்னேஸ்வரர்
கோயில் தெரு,
சூளை, சென்னை-7.

பாலூர் கண்ணப்ப முதலியார்.

# 1. திருமறம்

ஈடும் எடுப்பும் அற்ற நந்தம் இன்றமிழ் சிறந்து விளங்குதற்குப் பற்பல காரணங்கள் உண்டு. அவற்றுள் ஒன்று, இஃது ஒப்புயர்வற்ற பொருள் இலக்கணம் என்ற ஓர் அமைப்பினைப் பெற்று இலங்குவதாகும். இதனை உட்கொண்டே பரஞ்சோதியார் "இலக்கண வரம்பிலா மொழிபோல் எண்ணிடப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ" என அறைகூவி அறிவிப்பார் ஆயினர்.

இத்தகைய பொருள் இலக்கணம், அகப்பொருள், புறப்பொருள் என இருபாலாகி இயங்கும். ஒவ்வொரு பகுதியிலும் பல துறைகள் உள. மறம் என்னும் துறை புறப்பொருளைச் சார்ந்ததாகும். இம்மறத்துறை பல வகையாகக் கூறப்பெறும். அவை எருமைமறம், தானை மறம், தேர்மறம்; யானைமறம், குதிரைமறம் என்பன. எருமைமறம் இன்னது என்று இலக்கணம் வகுக்க வந்த இடத்தில் புறப்பொருள் வெண்பாமாலை,

> வெயர்பொடிப்பச் சினம்கடைஇப்
> பெயர்படைக்குப் பின்னின்றன்று

என்று கூறி, விளக்கும் நிலையில்

> "கடுங்கண் மறவன் கனல்விழியாச் சீறி
> நெடுங்கைப் பிணத்திடை நின்றான்—நடுங்கமருள்
> ஆள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
> வாள்வெள்ளம் தன்மேல் வர"

# உள்ளுறை

என்று எடுத்துக்காட்டையும் இயம்பிச் செல்கிறது. இதில் வீரனது மறம் பேசப்படுதல் காண்க. தானை மறத்தைப்பற்றிப் பேசுகையில்.

தாம்படைத் தலைக்கொள்ளவும்
ஓம்படுத்த உயர்புகூறின்று

என்று காட்டி இவ்விலக்கணத்திற்கு இலக்கியமாகக்

கழுதார் பறந்தலைக் கண்ணுற்றுத் தம்முன்
இழுதார்வேல் தானை இகலில்—பழுதாம்
செயிர்காவல் பூண்டொழுகும் செங்கோலார் செல்வம்
உயிர்காவல் என்னும் உரை.

என்று கூறி, இதில் தானை மறத்து வீரம் ஓதப்பட்டதைக் காண்க.

இத்துடன் இன்றி இத்தானை மறத்தின் ஆண்மையினை,

'வேற்றானை மறம்கூறி மாற்றார தழிபிரங்கினும்
ஆற்றின் உணரின் அத்துறை ஆகும்'

என்று இலக்கணவகையால் உணர்த்தி, இலக்கிய முறையில்,

மின்ஆர் சினம்சொரிவேல் மீளிக் கடல்தானை
ஒன்னார் நடுங்க உலாய்நிமிரின்—என்ஆம்கொல்
ஆழித்தேர் வெல்புரவி அண்ணல் மதயானைப்
பாழித்தோள் மன்னர் படை'

என்றும் அறிவிக்கிறது புறப்பொருள் வெண்பாமாலை.

தேர் மறமாவது,

'முறிமலர்த்தார் வயவேந்தன்
செறிமணித்தேர்ச் சிறப்புரைத்தன்று'

என்பது. அதாவது தேரின் சிறப்பை உணர்த்துவது. இதனை,

"செருமலி வெங்களத்துச் செங்குருதி வெள்ளம்
அருமுரண் ஆழி தொடர—வருமரோ
கட்டார் கமழ்தெரியல் காவலன் காமர்தேர்
ஒட்டார் புறத்தின்மேல் ஊர்ந்து"

என்ற பாட்டில் அறியவும். யானை மறம் இன்னது என்பது,

'எழும் அரவக் கடல்தானையான்
மழகளிற்றின் மறங்கிளர்ந்தன்று'

என்ற கொளுவால் கொளக் கிடைக்கிறது. இது யானையின் வீரத்தை உணர்த்துவது. யானையின் வீரம்,

அடக்கரும் தானை அலங்குதார் மன்னர்
விடக்கும் உயிரும் மிசையக்—கடல்படையுள்
பேயும் எருவையும் கூற்றும்தன் பின்தொடரக்
காயும் கழலான் களிறு'

என்று சிறப்பிக்கப்படுதலை ஓர்க.

குதிரை மறம் இன்னது என்பதையும் பார்ப்போம். இஃது இன்னது என்பதை,

எறிபடையான் இகல்அமருள்
செறிபடைமான் திறம்கிளந்தன்று

என்ற அடிகளால் அறியலாம். அதாவது குதிரையின் வீரம்பற்றிப் பேசப்படுவது. இலக்கியம் கொண்டு காணவேண்டின்,

'குந்தம் கொடுவில் குறுதிவேல் கூடாதார்
வந்த வகைஅறியா வாள்அமருள்—வெந்திறல்
ஆர்கழல் மன்னன் அலங்குளைமா வெஞ்சிலை
வார்கணையின் முந்தி வரும்'

என்ற பாடலைப் பார்க்கவும். இந்த அளவில் மட்டும் குதிரை மறம் கூறப்பட்டிலது. மேலும், குதிரையின் வீரத்தைச் சிறப்பிக்கும்போது, அக்குதிரை மதிலில் பாயும் தனிச்சிறப்பையும் இப்பெயர் தந்தே நம் நூல்கள் குறிப்பிடுகின்றன. அதாவது,

'ஏமாண்ட நெடும் புரிசை
வாமானது வகையுரைத்தன்று

என்று கூறுதல் அறிக. இதற்குரிய இலக்கியமாகத்

தாங்கல்மின் தாங்கல்மின் தானை விறல்மறவிர்
ஓங்கல் மதிலுள் ஒருதனிமா—ஞாங்கர்
மயிர் அணியப் பொங்கி மழைபோன்று மாற்றார்
உயிர் உணிய ஓடி வரும்'

என்னும் பாடல் திகழ்தல் காண்க.

தொல்காப்பியர் இம்மறம் பற்றிய குறிப்பினை மூன்றின்மேல் ஏற்றி,

தானை, யானை, குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும்'

என்று கூறிப் போந்தனர்.

மேலும், தொல்காப்பியம் பாசிமறம் என்னும் ஒரு துறையையும் கூறுகிறது. அது, "அதாஅன்று ஊர்ச் செருவீழ்ந்த மற்றதன் மறனும்" என்று புறத் திணை இயலில் பதின்மூன்றாம் நூற்பாவில் வருதல் காண்க. இவ்வடிக்குப் பொருள் விளக்கம் செய்த உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர், "அம்மதில் புறத்தன்றி, ஊரகத்துப் போரை விரும்பிய அப்பாசி மறம்" என்று எழுதினார். மேலும், விளக்குங்கால் "பாசி என்றார், நீரில் பாசிபோல் இருவரும் ஓதுங்கியும். தூர்ந்தும்

பொருதலின் !" என்று விளக்கினர். இதற்கு எடுத்துக் காட்டாக,

மறநாட்டும் தங்கணவர் மைந்தறியும் மாதர்
பிறநாட்டுப் பெண்டிர்க்கு நொந்தார்—எறிதொறும்
நீர்ச்செறி பாசிபோல் நீங்காது தம்கோமான் [போய்
ஊர்ச்செரு உற்றுரைக் கண்டு

என்ற பாடலைக் காட்டினர். இதனை மறனுடைப் பாசி என்று வெண்பாமாலை கூறி இதற்கு விளக்கம் தருங் கால்,

மறப்படை மறவேந்தர்
துறக்கத்துச் செலவுரைத்தன்று

என்று கூறி, உதாரணமாக,

பாயினர் மாயும் வகையால் பலகாப்பு
மேயினர் ஏய இகல்மறவர்—ஆயினர்
ஒன்றி யவர் அற ஊர்ப்புலத்துத் தார்தாங்கி
வென்றி அமரர் விருந்து

என்ற பாடலைக் காட்டுகிறது. அதாவது சின மன்னர் வீரசுவர்க்கத்துப் போன போக்கினைச் சொல்வது இத் துறை என்பது. இதுவே, இளம்பூரணர் கருத்து என் பது பாசி மறனுக்கு அவர் மேலே காட்டிய வெண்பா வையே எடுத்துக் காட்டியதால் அறிந்துகொள்ளலாம்.

மறம் என்ற சொல்லாலேயே ஓர் உறுப்புக் கலம் பகம் என்னும் பெயரிய நூற்களில் பேசப்பெறும். அங்கு மறம் எனப்படுவது மறக்குடியில் பிறந்த பெண் ஒருத் தியை மணம் செய்துகொள்ள எண்ணிய அரசனிடம் இருந்துவந்த தூதனைப்பார்த்து, அப்பெண்ணின் தந்தை யாகிய ஒரு மறவன் கூறுவது என்பதாகும். இப்

பொருட்டாதலை எல்லாக் கலம்பக நூற்களிலும் காணலாம். இதற்கு எடுத்துக்காட்டாகக் கீழ்வரும் பாடல்களைக் காண்க.

விற்ற தார்கலை பாதி யோடுவ
 ளத்தி லேஅழ விட்டதார்
வெஞ்சி றைப்புக விட்ட தார்துகில்
 உரிய விட்டுவி ழித்ததார்
உற்ற தாரமும் வேண்டும் என்றினி
 மன்னர் பெண்கொள ஒண்ணுமோ
உமிய டாமணம் என்ற வாய்கிழித்
 தோலை காற்றில் உருட்டடா
வெற்றி ஆகிய முத்தி தந்தருள்
 வேங்கை மாநகர் வேடர்யாம்
விமல ரானவர் எமைஅ டுத்தினி
 தெங்கள் மிச்சில்மி சைந்தபின்
பெற்ற வேலர்த மக்கு யாம்ஒரு
 பெண்வ ளர்ப்பினில் ஈந்தனம்
பெற்ற பிள்ளைகொ டுப்ப ரோஇதென்
 பேய்பி டித்திடு தூதரே!

என்பது வெங்கைக் கலம்பகம்.

வையம்முழு தொருங்கீன்ற இடப்பாகர்
 ஆனந்த வனத்தில் வாழும்
வெய்யதறு கண்மறவர் குலக்கொடியை
 வேட்டரசன் விடுத்த தூதா
கையில்அவன் திருமுகமோ காட்டுஇருகண்
 தொட்டுமுட்டைக் கதையில் தாக்கிச்
செய்யகொடி றுடைத்துஅகல்வாய் கிழித்துஅரிவோம்
 நாசியொடு செவியும் தானே!

என்பது காசிக் கலம்பகம்.

பேச வந்த தூத செல்ல
    ரித்த ஓலை செல்லுமோ
பெருவ ரங்கள் அருள்அ ரங்கர்
    பின்னை கேள்வர் தாளிலே
பாசம் வைத்த மறவர் பெண்ணை
    நேசம் வைத்து முன்னமே
பட்ட மன்னர் பட்ட தெங்கள்
    பதிபு குந்து பாரடா
வாச லுக்கி டும்ப டல்க
    வித்து வந்த கவிகைமா
மகுட கோடி திண்அ ளக்க
    வைத்த காலும் நாழியும்
வீசு சாம ரம்கு டில்தொ
    டுத்த கற்றை சுற்றிலும்
வேலி யிட்ட தவர்கள் இட்ட
    வில்லும் வாளும் வேலுமே!

என்பது அரங்கக் கலம்பகம்.

இவ்வாறு கலம்பகங்களில் வரும் மறம் என்னும் உறுப்பைக் காண்கிறபோது, மறம் என்னும் பொருளுக்கே உரிய மறவரது அஞ்சாமையினையும் ஆண்மையினையும் நன்கு உணர்கின்றோம்.

இதுவரை மறம் என்பது இன்னது என்பதையும் அஃது எவ்வெவ்வாறு இலக்கியங்களில் எடுத்துப் பேசப்பட்டது என்பதையும் அறிந்தோம். இவ்வாறு தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, கலம்பகங்கள் ஆகிய நூல்களை ஆய்ந்த வழி, பல்வேறு மறத் துறைகளைக் கண்டோமே அன்றித் திருமறம் என்னும் துறையைப் பற்றித் தெரிந்தோம் இல்லை.

ஆகவே, திருமறம் என்பது ஒரு தனிச்சிறப்புடைய தாதலை அறிதல் வேண்டும்.

இத்துறை புதிதாக இரு பெரும் பேரறிஞர் பெரு மக்களால் இயம்பப்பட்டதாகும். இதனை எடுத்து இயம்பியவர்கள் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரும், “கல்லாடம் படித்தவர்களோடு மல்லாடாதே” என்ற பழமொழிக்குக் காரணரான கல்லாடம் என்னும் நூலைச் செய்த கல்லாடனாரும் ஆவார். இவ்விருவர்களும் திருமறம் என்னும் துறையினைச் செயற்கருஞ் செயல்புரிந்த ஒரு பெருமகனார் வரலாற்றோடு இணைத்து இத்துறையினைப் புகுத்தியுள்ளனர். அப் பெருமகனார் யாவர்? அவரே கண்ணப்ப நாயனார். அப் பெருமகனார் மறம் ஏனைய மறங்களைப் போன்றதன்று. அஃது ஒப்புயர்வற்ற மறம். அதனால்தான் நுண்மாண் நுழைபுலப் புலவர்களாம் நக்கீரரும் கல்லாடரும், திருமறம் என அவரது அரும்பெரும் வீரச்செயலைக் குறிப்பாராயினர். திருக்கோவை என்றால் எங்ஙனம் ஏனைய கோவைகளை உணர்த்தாமல், திருக்கோவையார் ஒன்றையே உணர்த்துமோ, அதுபோலத் திருமறம் என்றதும் திண்ணனாராம் கண்ணப்பரது திருமறத்தையே உணர்த்தும். ஆகவேதான் நக்கீரனாரும் கல்லாடனாரும், திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்றே தலைப்புக் கொடுத்து அவரது திருமறத்தை விளக்கத் தனித் தனி நூலே இயற்றிவிட்டனர். திரு என்பதற்குப் பொருள் கூறவந்த பேராசிரியர், “கண்டாரால் விரும்பப்படும் தன்மை” என்று எழுதிப் போந்தார். கண்ணப்பரும் கண்டாரால் விரும்பப்படுபவர் ஆதலின், திருக்கண்ணப்ப தேவர் என்றும், அவரது மறச்செய

லும் திருமறம் என்றும் நன்கு நுணிகி ஆய்ந்து இரு பெரும் செம்மை சான்ற புலவர்கள் ஒருமிக்க இங்ஙனம் தாம் பாடிய நூலுக்கு இத்தலைப்பினைத் தந்தனர். இங்கு இவ்விருவரும் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்னும் நூல்களுள் கல்லாடனார் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். இந் நூல் முப்பத்தெட்டு அடிகளே உடையது. நக்கீரரது திருமறம் நூற்றைம்பத்தேழு அடிகளுடன், ஒரு வெண் பாவையும் கொண்டு திகழ்வது. இவ்விரு நூற்களும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராவது திருமுறையில் திகழ்கின்றன.

கல்லாடனார் திருமறம் இணைக்குறள் ஆசிரியப்பா வால் ஆனது. இணைக்குறள் ஆசிரியப்பா என்பது முதல் அடியும் இறுதி அடியும் நான்கு நான்கு சீர்களால் அமைந்து இடையே இருசீர் அடிகளும், முச்சீர் அடி களும் நாற்சீர் அடிகளும் கொண்டு வருவது. யாப்பருங் கலக்காரிகை "காமருசீர் இடைபல குன்றின் இணைக் குறள்" என இதற்கு இலக்கணம் கூறியதைக் காண்க. இவ்விலக்கண அமைப்பு, கல்லாடர் பாடிய திருமறம் நூலில் இருக்கக் காணலாம்.

இனித் திருக்கண்ணப்பரது திருமறம் எங்ஙனம் எடுத்து இயம்பப்படுகிறது என்பதை அறிவோமாக. கல்லாடனார் தம் பாட்டுடைத் தலைவரது செயலைத் திருமறம் என்றுரேனும் ஈரமும் உடையார் என்பதையும் நாம் நன்கு உணரத் தாம் நூலைத் தொடங்கும்போதே "பரிவின் தன்மை உருவுகொண் டனையவன்" என்கிறார். என்னே முரணுடைக் கருத்து! ஆனால், இது முர

னுடைக் கருத்தன்று; அறனுடைக் கருத்தே. வீர முள்ள இடத்தில்தான் ஈரமும் நன்கு துலங்கும். இது குறித்தே திருவள்ளுவப் பெருந்தகையார்.

'அறத்திற்கே அன்புசார்பு என்றுஅறியார்
மறத்திற்கும் அஃதே துணை'

என்றனர்.

நாம் எங்கே வீரம் உள்ள இடத்தில் ஈரம் இராது எனப் பிறழ உணர்ந்து விடுவோமோ என்ற கவலையி ஞல்தான், செந்நாப் போதார் இங்ஙனம் செப்பிச் சென்ருர். இதனை விளக்கிக்காட்டவே தெய்வப்புலவர் சேக்கிழார் பெருமானும்,

ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே
பாரம் ஈசன் பணியலா தொன்றிலார்
ஈரம் அன்பினர் யாதும் குறைவிலர்
வீரம் என்னுல் விளம்பும் தகையதோ ?

என்றனர்.

அடுத்த காட்சியாக ஆசிரியர், அன்பு மறவரது தோற்றப் பொலிவை நம் கண்முன் காட்ட விழை கிருர். வீரர் செருப்பு, உடைவாள், அரைக்கச்சு முத லானவற்றைப் புனைந்த தோற்றத்தினை,

போழ்வார் போர்த்த காழகச் செருப்பினன்
குருதி புலராச் சுரிகை எஃகம்
அரையில் கட்டிய உடைதோல் கசசையன்
தோல்நெடும் பையில் குறுமயிர் திணித்து
வாரில் வீக்கிய வரிக்கைக் கட்டியன்

என்று சொல்லால் எழுதிக் காட்டியுள்ளனர்.

மார்பகத்தும், நெற்றிமீதும் முடிமீதும் இலங்கினவை எவை என்பதைக் காட்டவந்தபோது,

உழுவைக் கூன்உகிர் கேழல்வெண் மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலைஉத் தரியன்
நீலப் பீலி நெற்றி சூழ்ந்த
கானக் குஞ்சிக் கவடி புல்லினன்
முடுகு நாறு குடிலை யாக்கையன்

என்று பாடிக் காட்டினர்.

இறைவன் பல்வேறு சமையங்களில் வெற்றி கண்டு வாகை சூடியவன். அவற்றுள் ஒன்று தாருகாவனத்து இருடிகள் விடுத்த வேங்கையினை வென்று வாகை சூடியதாகும். இறைவனைப் போலவே திண்ணனும், காட்டகம் புகுந்து, வேட்டையாடி வாகை சூடியவர். இவரது வேட்டையின் சிறப்பைப் பெரிய புராணத்தும், திருக்காளத்திப் புராணத்தும் பரக்கக் காணலாம். இதனைச் சுருங்கிய முறையில் "வேங்கை வென்று வாகை சூடிய சங்கரன் தன்னினத் தலைவன்" எனக் கல்லாடர் ஈண்டுக் குறிப்பிட்டுள்ளார்.

திண்ணனார் வில்லில் அம்பினைத் தொடுத்து விலங்கின்மீது எய்யின், அது தவறாது அதனை வீழ்த்துதல் வேண்டும். அது குறித்தே இவர் தேர்ந்த வில்லும் அம்பும் கொண்டு சென்றார் என்பார் "வில்லும் அம்பும் நல்லன தாங்கி" எனப் பாடினர். திண்ணனார் மலைக் காட்டகத்து இயங்கி வேட்டை யாடியதை "ஏற்றுக் கல்வனம் காற்றில் இயங்கி" என்ற அடி விளக்குகிறது. இவரது வேகமான இயக்கத்திற்கு இதனினும் ஏற்ற உவமை காண இயலாது. காற்று, காடு முழுவதும் பரவியது போலத் திண்ணனும் காட்டகம் முழுதும்

இயங்கி வேட்டை ஆடியதால் இவ்வுவமை கூறப்பட்டது.

திண்ணனார் திருக்காளத்தி அப்பருக்கு உணவு தயாரித்த விரைவினை ஆசிரியர்,

கணையில் வீழ்த்துக் கருமா அறுத்துக்
கோலில் ஏற்றிக் கொழுந்தீக் காய்ச்சி
நாவில் வைத்த நாட்போ னகமும்''

என்றனர். இதனினும் சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைச் செறித்து இனிது காட்ட இயலுமோ? இவ்வாறுதான் அரும் பெரும் நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகச் சொல்லி முடிப்பர் பேரறிவுபடைத்த மாபெரும் புலவர்கள். அப்பர் பெருமானார்க்கு அப்பூதியார் ஆட்கள் அறிவித்த முறையினைச் சேக்கிழார் செப்பும்போது,

துன்றிய நூல் மார்பரும்இத்
தொல்பதியார் மனையின்கண்
சென்றனர்இப் பொழுதுஅதுவும்
சேய்த்தன்று நணித்தென்றார்

என்று பாடி இருப்பதைக் காண்க. திருமறத்தில், "கருமா'' என்னும் சொல்லை இடைநிலை விளக்கணியாக அமைத்து, கருமா வீழ்த்தும் என்றும், கருமா அறுத்தும் என்றும் பாடி அணிநலத்தைக் காட்டியிருப்பதையும் ஈண்டு உணரவும். இறைவரது பூசனைக்கு வேண்டுவனவற்றையும் கொண்டுவர எண்ணிய திண்ணனார், தம் தலையில் மலர் மாலையினைச் சொருகிக்கொண்டும், குளிப்பாட்டுதற்குரிய நீரைத் தம் வாயில் முகந்துகொண்டும் வந்தார் என்பதைக் கூறும் இடத்து,

தன்தலை சொருகிய தண்பள்ளித் தாமமும்
வாய்க்கல சத்து மஞ்சன நீரும்

என்று கூறியுள்ளார். மலரைத் தலையில் தாங்கி என்னாது "சொருகி" என்றதன் நயம், நம் தலையில் நன்கு பதியவைத்து வந்தனர் என்பதாகும். தாங்கி என்னில் குடலில் வைத்த மலரைத் தாங்கி என்று பொருளாகி விடும் அன்றோ!

இங்ஙனம் திண்ணனார் பூசைக்குரியன கொணர்ந்தார். இவர்க்கு முன்பு சிவகோசரியார் இட்ட மலர்களைத் தம் செருப்புக் காலால் நீக்கினார். பிறகு தாம் கொண்டுவந்த வாய்நீரை உமிழ்ந்து, தலையில் சொருகிய மலர்களை இறைவன் தலையில் உதறினார். இறைவன் முடிமீது இருந்த மலர்களை நீக்கிய விதத்தை "முடியில் பூசை அடியால் நீக்கி" என்று ஆசிரியர் சுருக்கமாகக் கூறினார். இந்த அரியக் காட்சியினை மணிமொழியார்,

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊன்அமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்து

எனத் தம் வாசகத்தில் தீட்டிக் காட்டினார்.

திருஞான சம்பந்தரும், "வாய் கலசமாக வழிபாடு செயும் வேடன்" என்றனர். திருநாவுக்கரசரும் "காப்பதோர் வில்லும் அம்பும், கையதோர் இறைச்சிப் பாரம் தோற்பெரும் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கலசம் ஆட்டி" என்றும், 'குவப்பெரும் தடக்கை வேடன் கொடும்சிலை இறைச்சிப் பாரம் துவர்ப்பெருஞ் செருப்பால் நீக்கித் தூயவாய்க் கலசம் ஆட்ட" என்றும் நவின்றுள்ளார்.

இத்தகைய பூசை ஐந்து நாட்கள் காளத்தி அப்பருக்கு நடந்துள்ளது. இப்பூசனையின் இயல்பைத் தின

மும் கண்ட சிவகோசரியார், மலினங்களை நீக்கித் தமது பூசனையினை விடாது செய்துவந்தனர். இதனால் இவரைக் கல்லாடனார் "நீங்காக் குணத்துக் கோசரி" என்றனர். சிவகோசரியார் என்பது முதற்குறையாகவும், கடைக்குறையாகவும் அமைந்து கோசரி என நின்றது.

சிவகோசரியார்க்கு வேடனார் செய்யும் பூசை அனுசித பூசையாக இருந்தது. அவர் அது குறித்து வருத்தமே உற்றார். இவ்வருத்தத்தை நீக்கித் திண்ணனாரின் அன்பினை அவர்க்கு உணர்த்த இறைவர் எண்ணினார் என்பதை அறிவிக்க ஆசிரியர்,

> கோசரிக் கன்றவன் நேசம் காட்ட
> முக்கண் அப்பனுக் கொருகணில் உதிரம்
> தக்கி ணத்திடை இழிதர

என்று கூறியுள்ளனர். இந்நிலையில் திண்ணனார் உற்ற நிலையினை ஆசிரியர் "அக்கணம் அழுது விழுந்து தொழுது எழுந்து அரற்றி" என்று பாடிக்காட்டி அறிவிப்பாராயினர். இதனினும் திண்ணனார் உற்ற துன்புறு நிலையினை இத்துணைச் சுருங்கிய அளவில் காட்ட இயலுமோ? இதனினும் சொல்லவும் வேண்டுமோ?

"இங்ஙனம் திண்ணனார் செய்ததா மறம்? அதுவும் திருமறமா?" என்று சிலர் எண்ணலாம். திண்ணனாரது மறத்தினைத் தொடக்கத்தில் ஆசிரியர் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் குறிப்பிட்டுள்ளனர்.

> வேங்கை வென்று வாகை சூடிய
> சங்கரன் தன்இனத் தலைவன்

என்று குறிப்பாகவும், 'கணையில் வீழ்த்துக் கருமா அறுத்து' என வெளிப்படையாகவும் குறித்துள்ளனர்.

இவை வெறும் மறச் செயலைக் குறிப்பன. இவை திருமறம் ஆகா. ஆனால், இறைவரது கண்ணில் குருதி கண்டு அதனை நிறுத்துதற்குச் செய்த செயலே திருமறமாகும். இது திருமறச் செயல் என்பதை ஆசிரியர்,

புனமருந் தாற்றப் போதா தென்று
தன்னை மருந்தென்று மலர்க்கண் அப்ப

என்று கூறியிருத்தலைக் காண்க. இந்த அளவோடு திண்ணனாரின் திருமறம் நின்றுவிட்டதோ? இல்லை. இறைவர் தமது மற்றொரு கண்ணிலும் செந்நீர் சிந்தக் காட்டினார். அது கண்டும் அஞ்சாத திண்ணனார் தமது திருமறச் செயலை இனிது நிலைநாட்டியதை,

ஒழிந்தது மற்றை ஒண்திரு நயனம்
பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க
அற்ற தென்று மற்றக் கண்ணையும்
பகழித் தலையால் அகழ

என்று அறிவித்துள்ளனர் ஆசிரியர். இத்தகைய செயற்கரும் மறச் செயல் அன்றோ திருமறம் என ஈண்டுக் கூறப்பட்டது? இதனை வியந்தன்றோ "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை" என்றனர் திருவாதவூரர்!

இங்ஙனம் தமது இரண்டாவது கண்ணையும் திண்ணனார் தோண்ட முயன்றபோது, தரித்திலர் தேவதேவர். அவர் அவரை அவ்வாறு செய்யாது தடுத்தனர். அத்தடைச் செயல் எங்ஙனம் நிகழ்ந்தது என்பதை "ஆண்டகை ஒருகையாலும் இருகை பிடித்து" என்ற அடியில் காட்டினார் ஆசிரியர். ஒரு கையால் இரு கை பிடிக்க எவ்வாறு இயைந்தது என்ற ஐயம் நம்மனோர்க்கு எழாதிருக்கவே, "ஆண்தகை" என்ற சொல்

விளை ஆசிரியர் பெய்தனர் என்க. ஒருகை இருகை என்ற முரண்தொடை அழகையும் ஈண்டுக் காண்க. இறைவர் திண்ணனாரது திருக்கரங்களைப் பிடித்த தோடு நின்றிலர். தம் கண்களில் குருதி நின்றதை யும் காட்டி, "ஒல்லை நம்புண் ஒழிந்தது பாராய்" என் றும் கூறினார். அந்த அளவிலும் சொல்லி நின்றிலர் இறைவர். திண்ணனாரை 'நல்லை நல்லை' என இருமுறை கூறிப் பாராட்டியும் பேசினார்.

இவ்வாறு திண்ணனார் செய்த அரும் பெருஞ் செயலையும், அதற்கு இறைவர் செய்த அருளையும் சமயாசாரியர்கள் நன்கு போற்றிப் பாடியுள்ளனர். "கான் அலைக்கும் அவன்கண் இடந்து அப்ப நீள்வான் அலைக்கும் தேவு வைத்தார்" என்றும், "வேடன் மலர் ஆகும் நயனம் காய்கணையினால் இடந்து ஈசன் அடி கூடும்"என்றும், திருஞானசம்பந்தரும்,"தீப்பெரும் கண் கள் செய்ய குருதிநீர் ஒழுகத் தன்கண் கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கை வீரட்டனாரே" என்றும், "உவப்பெரும் குருதி சோர ஒருகணை இடந் தங்கப் பத் தவப் பெருந்தேவு செய்தார் சாய்க்காடு மேவினாரே" என்றும் அப்பர் பெருமானாரும் பாராட்டி அருளியது காண்க. சுந்தரர் இவரைக் "கலைமலிந்த சீர்நம்பிக் கண்ணப்பர்" என்று போற்றிப் புகழ்ந்தனர். 'கலை மலிந்த' என்று சிறப்பித்ததன் காரணம்.

புனமருந்து ஆற்றப் போதாது என்று
தன்னை மருந்தென்று மலர்க்கண் அப்ப

என்றதனால் என்க.

இறைவர் இங்ஙனம் திண்ணனாராம் கண்ணப்ப ருக்கு அருள் செய்ததும் போதும்! இதனால் புலவர்

பெருமக்களால் வஞ்சப் புகழ்ச்சியாகப் பாடப்பட்டதும் போதும் !

முக்கண்ணன் என்றானை முன்னோர் மொழிந்திடுவர்
அக்கண்ணற் குள்ள தரைக்கண்ணே - மிக்க
உமையாள்கண் ஒன்றரைமற் றான்வேடன் கண்ஒன்
றமையும் இதனால் அறி.

என்று பலப்பட்டை சொக்கநாதப் புலவரும்,

கல்லால் அடித்ததற்கோ காலால் உதைத்ததற்கோ
வில்லால் அடித்ததற்கோ வெட்கினீர் - சொல்வீரால்
மஞ்சுதனைச் சூழும் மதில்ஆனைக் காவாரே
நஞ்சுதனைத் தின்றதென்முன் நாள்.

வில்லால்அடிக்கச் செருப்பால்உதைக்க வெகுண்டொருவன்
கல்லால் எறியப் பிரம்பால் அடிக்கக் காசினியில்
அல்லாற் பொழில்தில்லை அம்பலவாணற்கோர்அன்னைபிதா
இல்லாத தாழ்வல் லவோஇங் ஙனேஎளி தானதுவே.

என்று காளமேகமும்,

மான்பிடித்தீர் முயல்மிதித்தீர் எவரும் காண
மன்றுதனில் ஆடெடுத்தீர் மகத்தில் வந்த
ஊன்பெருத்த யானையைக்கொன் றுரித்தீர் இப்பால்
உரப்பான தலைக்கறிக்கும் உவந்தீர் ஐயா
மீன்பொதிந்த விழிமடவாட்கு ஒருபங் கீந்தீர்
மேலான வேடன் எச்சில் மிகவே கொண்டீர்
கான்பொதிந்த வேதகிரி நாதா உம்மைக்
கழுக்கள்வந்து சுற்றுவதும் காணத் தானே.

என்று நமச்சிவாயப் புலவரும்,

வஞ்சகர்பால் நடந்தலைந்த காலில் புண்ணும்
வாசல்தொறும் முட்டுண்ட தலையில் புண்ணும்
செஞ்சொல்லை நினைந்துருகும் நெஞ்சில் புண்ணும்
திரும்என்றே சங்கரன்பால் சென்றேன் அப்பா
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும் வேடன்
கொடுங்காலால் உதைத்த புண்ணும் கோபமாகப்
பஞ்சவரில் ஒருவன் வில்லால் அடித்த புண்ணும்
பார்என்றே காட்டிநின்றான் பரமன் தானே

என இராமச்சந்திரக் கவிராயரும் பாடிப் பரவசமுற்ற பாக்களைப் படிமின்! படிமின்!

இவ்வளவு பழிக்கு இறைவர் ஆளானாராலும் கண்ணப்பர் தம் அன்பினைக் காளத்தியார் அறிவார்; காளத்தியார் பெருமையினைக் கண்ணப்பர்தாம் அறிவார். இதனைச் சைவசித்தாந்த சாத்திர நூலாம் திருக்களிற்றுப்படியார்,

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்
கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக்—கண்ணப்பர்
தாம்அறிதல் காளத்தி யார்அறிதல் அல்லதுமற்
றியாம்அறியும் அன்பன் றது.

என்று கூறுகிறது.

கல்லாடர் இயற்றிய திருமறத்தில் சில அரிய குறிப்புக்கள் விடுபட்டுள்ளன. காளத்தி அப்பருக்கே கண்ணை ஈந்தனர் கண்ணப்பர் என்பது எவரும் அறிந்த உண்மை. ஆனால், இந்நூல் காளத்தி அப்பன் என்று கூறாமல், 'முக்கண் அப்பன்' என்று பொதுப்படக் குறிப்பிட்டுள்ளது. இறைவர்க்கு இறைச்சியை ஊட்டினார் என்பது பேசப்படவில்லை. "நாவில் வைத்த நாட்

போனகம் கொணர்ந்தார்" என்பது மட்டும் பேசப்பட்டுள்ளது. இந்த நூலில் திண்ணனுர் என்ருே, கண்ணப்பர் என்ருே ஒரு பெயரும் காட்டப்பட்டிலது, திருவேட்டுவர் என்றுதான் இந்நூல் குறிப்பிடுகிறது.

இந்நூலில் ஓர் அரிய போக்குக் காணப்படுகிறது. அதாவது பெற்ருேர் பெயர்களையோ, கன்னி வேட்டைச் செயலையோ உடன் சென்ற நாணன், காடன் என்பவர்களைப்பற்றியோ குறிப்பிடாமல் மிகச் சுருங்கிய அளவில் இக்காலத்தில் (Synopsis) என்று கூறப்படும் முறையில் கண்ணப்பர் வரலாறு கூறப்பட்டுள்ளதாகும். இதனுல் நம் செந்தமிழ்ப் புலவர்கட்கு ஒன்றைச் சுருக்கவோ பெருக்கவோ இயலும் என்பது புலனுகின்றதன்ருே!

இத்தகைய அரிய பெரிய கருத்துக்களைத் தன்னகத்துக்கொண்ட திருக்கண்ணப்பர் தேவர் திருமறம் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள், பதிஞேராம் திருமுறையில், ஒரு நூலாகத் திகழ்ந்துகொண்டிருக்கிறது என்பதை முன்பே குறிப்பிட்டோம். ஆகவே, திருமுறைகளை வெறும் சமய நூல் என எண்ணுது, எச்சமயத்தவரும் படித்தறியவேண்டிய இலக்கிய நூல் என்பதை நாம் அறிதல் இன்றியமையாததாகும்.

# 2. ஒத்த கருத்துடைய ஒப்பிலாச் சான்றோர்

சான்றோர் என்னும் சொல் வெறும் பெரியவர்கள் என்று பொருள் தரும் மொழிமட்டும் அன்று. இக் கிளவிக்குரிய உண்மைப்பொருளைக் காணவிழைவார், சங்ககாலப் புலவர்களுள் ஒருவரான பிசிராந்தையார் வாக்கைத்தான் துணைகொள்ள வேண்டும். அவர் சான்றோர் இன்னார்தாம் என்று விளக்கவந்த இடத்து, "ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்" என்று விளக்கம் தந்து போந்தார். இத்தொடரின் பொருள் எல்லாப் பண்புகளும் நிறைந்து ஐம்புலன் களை அடக்கிய கோட்பாட்டினையுடைய சால்புடைய வர்கள் என்பது.

இத்தகைய பண்பு வாய்ந்த இருபெரும் சான்றோர் களின் ஒத்த கருத்துக்களை எடுத்து விளக்குவதே இக் கட்டுரையின் நோக்கம் ஆகும். இவ்விரு சான்றோர்கள் யாவர்? அவர்கள்தாம் திருவள்ளுவரும் திருமூலரும் ஆவர்.

இவ்விரு புலவர் பெருமக்கள் பெயர்க்குமுன் திரு என்னும் அடைமொழி அமைந்திருப்பதுகொண்டே இவர்களது மாண்பினை நன்குணர்ந்து கொள்ளலாம். 'திரு' என்னும் மொழி பல பொருள்களைக் குறிக்கும் பான்மை பெற்ற சொல்லே ஆயினும், பேராசிரியர் கொண்ட பொருளாம் கண்டோரால் விரும்பப்படும்

தன்மை என்பதில் ஐயம் எழ இடம் இல்லை அன்றோ? இவர்கள் ஒப்பற்ற அறிவு ஒளி பெற்றவர்கள்: கண்டாரால் விரும்பப்படுபவர்கள். ஆதலின், திரு என்ற அடைமொழி இந்த இருவர் பெயர்க்குமுன் கொடுக்கப்பட்டுள்ளது.

இனி, நாம் இம் மாபெரும் புலவர்களின் பாடல்களில் அமைந்த ஒத்த கருத்துக்களைக் காண்போமாக. திருக்குறள், திருமந்திரம் நூல்களில் அமைந்த தலைப்புக்களின் அமைப்பு இவ்விரு நூற்களிலும் ஒத்துக் காணப்படுகிறது. இதனை, கடவுள் வாழ்த்து, அன்புடைமை, கல்லாமை, கல்வி, கள்ளுண்ணுமை, கொல்லாமை, நடுவுநிலைமை, புலால் மறுத்தல், பிறர்மனை நயவாமை, வானச்சிறப்பு, பொறையுடைமை, பெரியாரைத்துணைக் கோடல், தவம், துறவு, கூடா ஒழுக்கம், வாய்மை, ஊழ், நல்குரவு, அவா அறுத்தல், புறங்கூறுமை என்ற தலைப்புக்களைக்கொண்டு உணர்ந்துகொள்ளலாம். நிலையாமை என்னும் ஒரு தலைப்பினைமட்டும் திருவள்ளுவர் அமைத்தனர். திருமூலர் உயிர் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்று பிரித்துப் பாடினர்.

இறைவனைப்பற்றி இவ்விரு புலவர்களும் குறிப்பிடும்போது திருமூலர், 'ஆதிபகவனும்' 'கமலமலர் உறைவான் அடி' 'போது உகந்தேறும் புரிசடையான் அடி' 'தன்னை ஒப்பாய் ஒன்றும் இல்லாத் தலைமகன்' ஒப்பிலி வள்ளலை' 'அறஆழி அந்தணன்' 'ஆதிபராபரன்' 'கொடையுடையான் குணம் எண்குணம் ஆகும்' பொறிவாயில் ஒழிந்து எங்கும் தானான போதன்' 'ஆரும் அறியார் அகாரம் அவன்' என்று குறிப்பிட்டனர்.

திருவள்ளுவர், 'ஆதிபகவன் முதற்றே உலகு' 'மலர்மிசை ஏகினான் மாணடி' 'எண்குணத்தான் தாள்' 'தனக்கு உவமை இல்லாதான் தாள்' 'அறஆழி அந்தணன் தாள்' 'அகர முதல் எழுத்தெல்லாம் ஆதிபகவன்' 'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம்' என்று பாடியுள்ளார்.

சொற்றொடர் ஒற்றுமையினை 'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்' 'உடம்பொடு உயிரிடை நட்பு' என்று திருமந்திரத்திலும், 'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின்' 'உடம்பொடு உயிரிடை நட்பு' என்று திருக்குறளிலும் வருவதுகொண்டு தெளியலாம்.

பொருள் ஒற்றுமைகளைக் கீழ்வரும் எடுத்துக் காட்டுகளின் மூலம் நன்கு தெரிந்துகொள்ளலாம்.

திருமூலர் 'ஒருமையுள் ஆமைபோல் உள் ஐந்து அடக்கி' 'ஆமை அகத்தினில் அஞ்சும் அடங்கிடும்' 'கூற்றம் வருங்கால் குதித்தல் ஆமே' 'காக்கை கரைந்து உண்ணும்' 'பற்றது பற்றின் பரமனைப் பற்றுமின்' 'காமம் வெகுளி மயக்கம் இவை கடிந்து 'அந்தண்மை பூண்ட அருமறை அந்தத்துச் சிந்தைசெய் அந்தணர் 'பார்த்திருந்து உண்மின்' 'காமமும் கள்ளும் கலதிகட்கே ஆகும்' 'வாளை அடைக்கும் வழிஅது ஆமே' 'தத்துவ ஞானம் தலைப்பட் டவர்க்கே, தத்துவ ஞானம் தலைப் படலாய் நிற்கும்' 'அடக்க அறிவெனும் தோட்டியை வைத்தேன்' 'ஆவையும் காவலன் காப்பவன்' 'அமுதூறும் மாமழை' எனவும் கூறியுள்ளனர். திருவள்ளுவர் 'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல்' 'கூற்றம் குதித்தலும் கைகூடும்' 'காக்கை கரவா கரைந்துண்ணும்' 'பற்றுக பற்றற்றான் பற்றினை' 'காமம் வெகுளி

மயக்கம் இவை மூன்றும் நாமம் கெட' 'அந்தணர் என் போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்' வருவிருந்து பார்த்திருப்பான்' 'இரு மனப் பெண்டிரும் கள்ளும் கவறும் திருநீக்கப்பட்டார் தொடர்பு' 'வாழ்நாள்வழி அடைக்கும் கல்' 'தவமும் தவமுடையார்க்கு ஆகும்' 'உரன் என்னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காப்பான்' 'ஆபயன் குன்றும்' 'தான் அமிழ்தம் என்று உணரல் பாற்று' என்று தம் நூலில் கூறியுள்ளார்.

இங்கு எடுத்துப் பேசப்பட்ட இருபெரும் சான்றோர்கள் மிகமிகப் பேரறிவு படைத்த பெருமக்கள் ஆவர். சிறந்த சித்தர்களும் ஆவர். திருமூலர் 'நம்பிரான் திருமூலன்' என்று சுந்தரராலும், 'என் உச்சி அடி வைத்தபிரான் மூலனாகின்ற அங்கணனே' என்று நம்பியாண்டார் நம்பிகளாலும், 'அருள் மூலர்' என்று சிவஞான முனிவராலும், 'திருமூல தேவனையே சிந்தை செய்வார்க்குக் கருமூலம் இல்லையே காண்' என்று பெயர் அறிய ஒண்ணா ஒரு பெரியாராலும் போற்றப் பட்ட மாபெரும் புலவர் ஆவார். திருமந்திரத்தின் மாண்பினைப் பற்றிப் பேசவந்த ஒரு பெரியார்,

திருமந் திரமே சிவகதிக்கு வித்தாம்
திருமந் திரமே சிவமாம்—அருமந்த
புந்திக்கு ளெங்கினைந்து போற்றுமடி யார்தமக்குச்
சந்திக்கும் தற்பரமே தான்.

என்று உண்மை தெரிந்து ஓதியுள்ளார்.

திருவள்ளுவர் பெருமையினைத் திருவள்ளுவமாலை என்னும் நூல் கொண்டு உணர்ந்துகொள்ளலாம்.

'பா முறை தேர் வள்ளுவர்' எனச் சீத்தலைச் சாத்த ஞரும், 'புலவன் வள்ளுவன்' என இறையனுரும், 'நான் முகத்தோன் தான் மறைந்து வள்ளுவனுய்' என உக்கிரப் பெருவழுதியாரும், 'வால் அறிவின் வள்ளுவன்' எனப் பரணரும், 'முப்பால் மொழிந்த முதற்பாவலர் ஒப்பார் எப்பாவலரினும் இல்' என ஆசிரியர் நல்லந்துவனுரும், 'தெய்வத் திருவள்ளுவர்' எனக் கீரந்தையாரும், 'மறு வில் புலச் செந்நாப் போதார்' என நல்கூர் வேள்வி யாரும், 'தேவில் சிறந்த வள்ளுவர்' என உறையூர் முதுகூற்றனுரும், 'தெய்வத் திருவள்ளுவர்' எனத் தேனீக்குடிக்கீரனுரும், 'நாப்புலமை வள்ளுவனுர்'' எனக் கவுணியனுரும் புகழ்ந்துள்ளார். தெய்வப்புலமைத் திரு வள்ளுவனுர் எனத் துறைமங்கலச் சிவப்பிரகாச சுவாமி கள் போற்றியுள்ளார். திருக்குறளின் சிறப்பைக் கூறவந்த திருவள்ளுவமாலை என்னும் நூல் 'அப்பால் ஒருபாவை ஆய்பவோ வள்ளுவனுர் முப்பால் மொழி மூழ்குவார்' என்றும், 'மண் நின்று அளந்தது குறள் என்றும்,

> ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
> பாயிரத்தி ேனுடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
> வாய்கேட்க நூலுளவோ ?, மன்னு தமிழ்ப்புலவ
> ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்'

என்றும், 'வள்ளுவனுர் முப்பாலின் மிக்க மொழியுண்டு எனப் பகர்வார் எப்பாவலரினும் இல்' 'உள்ளுதொ றுளம் உருக்குமே வள்ளுவர் வாய்மொழி மாண்பு' ன்றும், 'எல்லாப் பொருளும் இதன்பால் உள, இதன் பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்' எனவும், 'வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்கு ஆய்தொறும்

ஊறும் அறிவு' எனவும், 'உள்ளுநர் உள்ளும் பொருள் எல்லாம் உண்டென்ப வள்ளுவர் வாய்மொழி மாட்டு' எனவும், 'உள்ளிருள் நீக்கும் விளக்கு' எனவும், 'உள்ளக் கமலம் மலர்த்தி உளத்துள்ள தள்ளற்கு அரிய இருள் தள்ளுதலால்—வள்ளுவனார், வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்கும்' எனவும், 'சிந்தைக்கினிய செவிக் கினிய வாய்க்கினிய வந்த இருவினைக்கு மாமருந்து—வள்ளுவனார் பன்னிய இன்குறள் வெண்பா' எனவும், 'வள்ளுவர் பன்னிய இன்குறள் வெண்பா' 'அகிலத்தோர் உள்ளிருள் நீக்கும் ஒளி' எனவும், 'வள்ளுவர் பாட்டின் வளம் உரைக்கின் வாய்மடுக்கும் தெள்அமுதின் தீஞ் சுவையும் ஒவ்வாதால்'' எனவும் போற்றிப் புகழ்கிறது. ஆகவே, இவ்விரு பெரியோர்களின் ஒத்த கருத்துக் களையும் பெருமைகளையும் உணர்ந்த நாம் அவர்களின் கருத்துக்களை நன்குணர்ந்து அவற்றின்படி ஒழுகல் கடமை ஆகும்.

---

# 3. கபிலர்

சங்க காலப் புலவர்களுக்குள் பெருமை பெற்ற வர்களுள் கபிலரும் ஒருவர் ஆவார். இவர் அக் காலத்திலேயே இவரைப் போன்ற பெருமக்களா லேயே பெரிதும் பாராட்டிப் பேசப்பட்டனர் என்றால், அவரது அறிவின் மேம்பாட்டையும் பெருமையின் மாண்பையும் கூறவேண்டா அல்லவா? நக்கீரனார் இவரைப் 'பலர்புகழ் நல்இசை வாய்மொழிக் கபிலன்' என்றும், பெருங்குன்றூர்க்கிழார், 'நல்இசைக் கபிலன்' என்றும், பொருந்தில் இளங்கீரனார் 'வெறுத்த கேள்வி விளங்குபுகழ் கபிலன்' என்றும், மாறோக்கத்து நப்பசலை யார் 'பொய்யா நாவில் கபிலன்' என்றும் உளமாரப் புகழ்ந்து பாடியுள்ளார்.

இத்தகைய பெரியராம் கபிலர், பாண்டியநாட்டைச் சார்ந்த திருவாதவூரில் பிறந்தவராவார். இதனைத் திரு வாலவாயுடையார் திருவிளையாடல் பாடலாகிய,

'காதல்கூர் பனுவல் பாடும் கபிலனார் பிறந்த மூதூர்
வேதநா யகனார் வாழும் வியன்திரு வாத வூரால்'

என்பதனால் அறியலாம்.

கபிலர் அந்தண மரபினர் ஆவார். இந்த உண்மை இவரது வாய்மொழியாலும், பிறர் கூறும் கூற்றாலும் வலியுறும், 'யானே பரிசிலன் அந்தணன்' என்றும், 'அந்தணப் புலவன் கொண்டு வந்தனனே' என்றும் புறநானூற்றில் இவர் பாடியுள்ள பாடல்களில் காணப்

படும் தொடர்களாலும், மாறோக்கத்து நப்பசலையார், இவரைக் குறிப்பிடும்போது 'புலன் அழுக்கற்ற அந்தணன்' என்று கூறி இருப்பதனாலும் அறியலாம்.

இவர் மதுரைக் கடைச்சங்கப் புலவருள் ஒருவராயினும், மதுரையையே தமது வாழ்க்கைக்குரிய இடமாகக்கொண்டு வாழாமல், பலப்பல இடங்கட்குச் சென்று பல வள்ளல்களைப் பாடி அவர்களை மகிழ்வித்தும் தமது கடமைகள் பலவற்றைச் செய்தும் வந்துள்ளார்.

கபிலர் பாடிய நூற்கள் பலவாக உள்ளன. பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டு இவரால் பாடப்பட்டது. இப்பாட்டுப் பாடியதன் முக்கிய நோக்கம், ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ்ச்சுவையை அறிவுறுத்தற்காகவே ஆகும். இப்பாடலே இவன் தமிழின்பால் தணியா வேட்கை கொண்டு தானும் சங்கப் புலவருள் ஒருவனாக இருக்கும் பேறுபெற்று ஒரு தமிழ்ப் பாடலையும் பாடியருளக் காரணமாயிற்று என்று யூகிக்க இடம் இருக்கிறது. குறிஞ்சிப்பாட்டில் மாலைக்காலத்தில் பறவைகளும் விலங்குகளும் மக்களும் செய்யும் செயல்கள் நல்ல முறையில் சித்தரிக்கப்பட்டுள்ளன. மாதர் அந்திக்காலத்தில் விளக்கேற்றி வீட்டினை விளக்கமுறுத்தும் செயலை 'வளமனைப் பூந்தொடி மகளிர் சுடர் தலைக் கொளுவி' என்று குறிப்பிட்டுள்ளார். இப்பாடலின் மூலம் பல மலர்களின் பெயர்களை அறியலாம்.

பதிற்றுப்பத்து என்னும் நூலில் ஏழாம் பத்துச் சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன்மீது பாடப்

பட்டது. இச்சேரமன்னன் அந்தணர்கட்கு அருங்கலம் ஈந்தபோது நீர்வார்த்துத் தத்தம் செய்த காலத்து, முற்றம் சேறாகியது என்பதை 'அந்தணர் அருங்கலம் ஏற்ப நீர்பட்டு இருஞ்சேறு ஆடிய மணல்மலி முற்றத்து' என்று பாடியுள்ளார். இவன் சொன்ன சொல் தவறாதவன் என்பதை 'நிலம் திறம் பெயரும் காலை ஆயினும் கிளந்த சொல்நீ பொய்ப்பு அறியலையே' என்று கூறியதால் அறியலாம். இன்னும் பலவாறு இவனைப்பற்றிப் பாடி, நூறாயிரம் பொற்காசையும் அவன் ஒரு மலைமீது ஏறிக் கண்டு கொடுத்த நாட்டையும் பரிசிலாகப் பெற்றவர்.

ஐங்குறுநூற்றில் குறிஞ்சியைப்பற்றிய நூறு பாடல்களில் பல அரிய கருத்துக்கள் வெளியாகின்றன. குறிஞ்சிநிலத் தலைவனது குதிரையின் குடிமிக்கு அந்தணச் சிறுவன் குடுமியினை அழகுற உவமைப்படுத்திக் கூறியுள்ளார். 'குறுமகப் போலத் தாமும் குடுமித் தலைய' என்ற வரியினைக் காண்க.

குரங்குகள் அவரையை நிறையத் தின்று வயிறு பெருத்துக் காணப்பட்டனவாம். அவ்வாறு தோன்றிய அவற்றின் வயிறு பண்டங்களை விற்கும் வணிகர் தம் கையில் வைத்திருந்த பைபோல் இருந்ததாம். இதனை, 'அவரை அருந்த மந்தி பகர்வர் பக்கில் தோன்றும்' என்பர் (பகர்வர் பக்கு—வணிகர் பை) மாதர்களைப் பசுவுக்கு உவமை கூறினர். பசு போலப் பெண்டிர் என்னும் தொடரைக் காண்க. குரங்குகளின் சேட்டைகளையும் ஐங்குறுநூற்றுக் குறிஞ்சிப் பகுதியில் காணலாம். அதாவது குரங்குகள் நீரில் தோன்றும் கொப்புளங்களைச் சிறுகோல் கொண்டு உடைக்குமாம். இங்ங

னம் பல அழகு தோன்றக் குறிஞ்சிப் பகுதியைப் பாடியுள்ளார் கபிலர்.

கபிலருக்குக் குறிஞ்சித் திணையைப் பாடுவதில் பெரு விருப்பம் போலும்! கலித்தொகை என்னும் நூலிலும் இருபத்தொன்பது கலிகளைப் பாடியுள்ளார். 'கற்றோர் ஏத்தும் கலி' என்ற சிறப்பே கலித்தொகைப் பாடலின் நயத்தைப் புலப்படுத்தும். அதிலும் கபிலர் போன்றோர் பாடலில் நயங்கட்குக் கேட்கவாவேண்டும்? அக்காலத்தில் அரசர்கள் பொய் கூறார் என்பதை வற்புறுத்திக் கூறுகையில்,

> குன்றக நல்நாடன் வாய்மையில் பொய்தோன்றில்
> திங்களுள் தீத்தோன்றி அற்று'

என்று எடுத்து மொழிந்துள்ளார்.

யானைகள் நீர் பருக நீர் நிலைகட்கு அழைத்துச் செல்லுங்காலத்து வாளா யானைகளை ஒரு வழியே நடத்திச் செல்லாமல், வேழங்கட்கு முன் பறை அறைந்து தெருவில் விளையாடும் இளஞ்சிறார்களும் நடமாடும் ஏனையோர்க்கும் யானைகளால் யாதோர் இடையூறும் உறாதிருக்க அழைத்து ஏகவேண்டும் என்றும், இதனை மறவாது அரசர்கள் பாகர்க்கு அறிவித்திருக்கவேண்டும் என்றும், இங்ஙனம் செய்யா வேந்தன் தவறுடையன் என்றும் கபிலர், குறிஞ்சிக்கலியுள் நன்கு புலப்படுத்தியுள்ளார். இதனை,

> 'நிறை அழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
> பறைஅறைந்து அல்லது செல்லற்க என்னா
> இறையே தவறுஉடை யான்'

என்ற கலி யடிகளில் காண்க. இதனால் அரசர்கள மிகவும் விழிப்புடன் இருந்து ஒவ்வொரு காரியத்தை யும் கவனித்தல் வேண்டும் என்னும் குறிப்புத் தோன்று கிறதன்றோ ?

இரந்தார்க்கு ஒன்றும் ஈயாது வாழ்தலினும் சாதலே மேல் என்னும் பண்பாடு நம்மவர்க்கு இருந்த தைக் கபிலர் கலிப்பாவில்,

'ஈதல் இரந்தார்க்கு ஒன்று ஆற்றாது வாழ்தலின்
சாதலும் கூடுமாம் மற்று'

என்று நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். இந்த அளவில் கூட நம் பண்டைய பண்பாட்டை இவர் குறிப்பிட்டு நிறுத்தவில்லை. தமக்கு இனிது என்ற காரணத்தால் பிறர்க்கு இன்னாது செய்யமாட்டார்கள் நம் முன்னோர் என்பதை,

'தமக்கு இனிது என்று வலிதில் பிறர்க்குஇன்னா
செய்வது நன்றாமோ மற்று'

என்ற அடிகளில் அழுத்தம் திருத்தமாகப் பாடி வைத் துள்ளார். இன்னோர் அன்ன கருத்துக்களை அந்நூலில் காணலாம்.

இவர் பாடிய புறநானூற்றுச் செய்யுளால்தான் இவரது கடப்பாட்டு உணர்ச்சியும், இவர்க்குப் பாரி என்னும் வள்ளல்பால் இருந்த நட்பு உரிமையும் நமக்கு நன்கு புலனாகின்றன.

சேரமான் கடுங்கோ வாழியாதனைத் தனித்த முறையில் பத்துப் பாடல்களில் பாடி நின்றதோடு

நில்லாமல் புறநானூற்றிலும் அவனது புகழ் விளங்கும் நிலையில் பாடிய பாட்டு ஒன்றில் அவன் சோம்பல் உறாத மனத்தை உடையவன் என்பதையும், தனக்கென ஒன்றையும் வைத்துக்கொள்ளாது பிறர்க்கு ஈபவன் என்பதையும், எதிரிகளை எதிர்த்துப் போரிடும் சேனைகளையுடையவன் என்பதையும் குறித்துச் சிறப்பித்துள்ளார். இதனை,

'ஒடுங்கா உள்ளத்து ஓம்பா ஈகைக்
கடந்தடு தானைச் சேரலாதன்'

என்ற அடிகளில் காணலாம். கபிலர்க்கு உழைத்து உண்ணவேண்டிய நிலையில்லாமையால் தம் கரம் உரம் பெறாது மென்மையாகவே இருப்பதற்குரிய காரணத்தினை இச்சேரமன்னர்க்கு அறிவுறுத்திய மொழிகளைப் பார்க்கும்போது, அக்காலத்துப் புலவர்கள் நன்கு உண்டு உவகையோடு இருந்தமை நன்கு புலனாகும். கபிலர் தம் வாழ்க்கையினை,

'கறிசோ றுண்டு வருந்துதொழில் அல்லது
பிறிதுதொழில் அறியா ஆகலின் நன்று
மெல்லிய பெரும!'

என்று கூறியுள்ளார்.

இளங்கோ வேள் ஒரு கொடையாளி என்றாலும் அவன் பாரியின் மகளிரை மணக்கக் கபிலர் கூறியும் மறுத்தனன். அதன் காரணமாக அவனை வெறுத்துப் பாடியுள்ளார்.

கபிலர் பாரி மகளிரை விச்சிக்கோன் என்பானிடம் அழைத்துச் சென்று அம்மகளிரை ஏற்று மணந்து

கொள்ளுமாறு பணித்தனர். அத்தகையவனது வீரத்தையும் அவனது நாட்டின் வளத்தையும் சுவைபட இவர் சுருக்கமாகப் பாடி இருப்பதைப் பார்க்கும் காலத்து இவரது புலமை நன்கு புலனாகும்.

'அடங்கா மன்னரை அடக்கும்
மடங்கா விளையுள் நாடுகிழ வோயே!'

என்ற சுருங்கிய அடிகளில் மேற்கூறிய கருத்துக்கள் அடங்கி இருப்பதைக் காண்க.

பாரி என்னும் வள்ளலுக்கும் கபிலருக்கும் இருந்த நட்பு மிகுதி என்பது எவரும் அறிந்த உண்மை. பாரி முல்லைக்குத் தேரை ஈந்த முதிர்ந்த ஈகையாளன் என்பதைப் பலப்படி இவர் பாடியுள்ளார். விச்சிக்கோ என்பானிடம் பாரி மகளிரைப்பற்றிக் குறிப்பிடுகையில் 'முல்லைக்கொடி நாத்தழும்பு இருப்பப் பாடாதாயினும் கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த பரந்து ஓங்கு சிறப்பின் பாரி மகளிர்' என்றனர். ஒரு சமயம் மூவேந்தர் பாரியின் பறம்பு மலையினை முற்றுகையிட்டனர். அதுபோது அவர்களைப் பார்த்து, 'முடியுடை மூவேந்தர்களே! நீங்கள் எங்கள் பாரியின் பறம்பு மலையினை முற்றுகையிட்டு அதனைக் கொள்ள எண்ணும் எண்ணம் பயனற்றது. அதனைக் கொள்ளவேண்டுமானால், இரவலர்களைப்போல வந்து பாரியை அணுகி யாசகமாகப் பறம்பு மலையினைக் கேளுங்கள். அவன் இல்லை என்னாது ஈயும் கடப்பாடுடையவன். ஆதலின், நீங்கள் கேட்ட பறம்பு நாட்டைப் பரிவுடன் ஈவன்' என்

றனர். இதனால் இவர் பாரியின் கொடையினை எத்துணையளவுக்கு உயர்த்திப் பேசியுள்ளார் என்பதைப் பாருங்கள்! பாரியின் கொடைச்சிறப்பை இகழ்வது போலப் புகழ்ந்து பேசுகையில்,

'பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டுஈண்டு உலகு புரப்பதுவே'

என்றனர்.

கபிலரால் பாடப்பட்ட பெருமை சான்றவர்களுள் மலையமான் திருமுடிக்காரியும் ஒருவன் ஆவான். இவனது கொடையை நினைந்து நாலாபக்கங்களினின்றும் பரிசில் மாக்கள் பரந்தோடி வருவர் என்பதை 'ஒரு திசை ஒருவனை உள்ளி நால்திசைப் பலரும் வருவர் பரிசில் மாக்கள்' என்று கபிலர் இவனைப்பற்றிக் கூறியுள்ளார். இவன் எவர்க்கும் ஒருபடித்தாகவே ஈந்த ஒப்பற்ற வள்ளல் என்றாலும், புலவர்மாட்டுச் சிறிது வேறுபாடு காட்டி மிகுதியாக ஈதல் வேண்டும் என்பதை அறிவுறுத்தி இவனை நோக்கி, 'பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே' என்று பாடினர் கபிலர். இதனால் புலவர்கள் தனிச்சிறப்புடையவர்கள் என்பதைக் குறிப்பாக உணர்த்தினர் கபிலர். திருமுடிக்காரி தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த காரணத்தால் இவனது நாடு இயற்கை அழிவும் செயற்கை அழிவும் எய்தாது என்பதை உளமாரக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். இதனை,

'கடல்கொளப் படாஅது உடலுநர் ஊக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் நாடே!'

என்ற அடிகளில் காண்க.

தொடக்கத்தில் கபிலர் தம் கடப்பாட்டை நிறைவேற்றும் கருத்துடையவர் என்பதைக் குறிப்பிட்டிருந்தோம். இதற்குக் காரணம் இவர்பால் இருந்த இரக்கமே அன்றி வேறன்று. இந்த உண்மை பாரி இறந்ததும், அவன் மகளிரைத் தம் மக்களாகவே கருதி அவர்கட்குத் தக்க வரனைநாடி அவர்கட்கு மணமுடித்து வைக்க எடுத்துக்கொண்ட முயற்சியினால் நன்கு தெரிய வருகிறது. மேலும், இவருக்குப் பெண்கள் சமூகத்தில் இரக்கம் மிகுதியும் உண்டு என்பதும் தெரிகிறது. இதற்குரிய சான்றையும் ஈண்டே காண்போமாக.

பேகன் என்பவன் கடை எழு வள்ளல்களில் ஒருவன். இவனது வள்ளன்மை கற்பனைக்குக்கூட எட்டாதது என்று எண்ணியும் விடலாம். ஆனால், இவனது கொடையைப்பற்றிப் புலவர்கள் கூறியவை கற்பனையும் அல்ல; புனைந்துரையும் அல்ல. அனைத்தும் மெய்யுரைகளே. இவன் குளிரால் வாடி இருந்த மயில் ஒன்றன் வாட்டத்தினைக் கண்டு ஆற்றானாய் அதற்குத் தனது விலையுயர்ந்த போர்வையினை ஈந்து போர்த்திச் சென்றான். இது சீரிய கொடை அன்றோ? ஆனால், இத்தகைய பண்பாடு அமைந்த பண்பாளனிடம் ஒரு தீக்குணம் மட்டும் இருந்துவந்தது. அதாவது, தனக்கு வாழ்க்கைப்பட்ட கண்ணகி (இவள் கோவலன் மனைவியின் பெயரினைப்பெற்ற நங்கையாகிய பேகன் மனைவி ஆவாள்) என்பாளைத் தணந்து பரத்தை ஒருத்தியின் வயத்தனாய் வாழ்ந்து வந்ததே ஆகும். ஆனால், இவனது இச்செயல் நீடித்திருக்கவில்லை. புலவர்கள் பலர் முனைந்து நின்று பேகனுக்கு அறிவுறுத்தி அவனைப் பரத்தையினின்று பிரித்துக் கண்ணகி என்பாளுடன் வாழச் செய்

தனர். அங்ஙனம் முயன்றவருள் கபிலரும் ஒருவர் ஆவார்.

ஒருமுறை கபிலர் பேகனைக் காண அவனது திரு மாளிகைக்குச் சென்றனர். ஆனால், பேகன் அம்மனை யகத்து இலன். இதனைப் புலவர் அறியார் என்றாலும், அவனது இருப்பிடமான மலையினை வாழ்த்தி நின்ற போது பேகனது மனையாள் கண்ணகி, தன் அன்புக் குரிய மணாளன் பெயரைச் சுட்டிப் பாடியவர் யாரோ என்பதை அறிய வெளியே வந்தனள். வந்தவள் முகத் தில் வசீகரம் இன்றி வருத்தக் காட்சியே தோற்றம் அளித்தது. இதனைக் கண்டார் கபிலர். காரணத்தினை ஒருவாறு ஊகித்து அறிந்துகொண்டார். நேரே பேகன் வாழிடம் நோக்கிப் புறப்பட்டார். பேகனையும் கண் டார். உடனே பேகனை நோக்கி, 'பேக! நின்னை நாடி நின் மனையகம் சென்றேன். சென்ற யான் நின் புகழை வாழ்த்தி நின்றேன். அதுபோது ஓர் அழகிய அணங்கு வெளியே போந்தனள். போந்தவள் தன் கண்களில் நீர்வார நின்றனள். அவளைக் கண்டபோது, அவள் இரக்கப்படத் தக்கவள் என்பது தெரிகிறது. அவள் யாரோ யான் அறியேன். என்றாலும், உன் பேரைக் கேட்டதும் உருகும் உள்ளத்தவளாய் இருத்தலின், அவள் உனக்கு உறவினள் என்றே யான் ஊகிக்கின் றேன். எனவே, அவட்கு அருள்செய்ய வேண்டுவது உன் கடனே' என்றனர். இவ்வாறு கூறக்கேட்ட பேகன் அவர் கூறியபடி நடந்திருப்பான் என்பதைக் கூற வேண்டா அன்றோ? இங்ஙனமெல்லாம் இப்புலவர் பெருமான் பிறர்பொருட்டு அரும்பாடு பட்டுள்ளார். இவரது இரக்கச்செயலுக்கு மற்றோர் எடுத்துக்காட்டை

யும் எடுத்துக்காட்டலாம். பாரியின் பறம்பு மலை மூவேந்தரால் முற்றுகை இடப்பட்டு இருந்தபோது, உள்ளிருப்பார் வெளியிலும் வெளியில் இருப்பார் உட்புறமும் போய்வர வசதி இல்லாமல் போனதால் பறம்பு மலைக்குள்ளிருப்பார்க்கு உணவு முட்டுப்பாடு உண்டாயிற்று. அந்தக்காலத்தில் கிளிகளையும் குருவிகளையும் வளர்த்து அவற்றின்மூலம் நெற்களைக் கொணருமாறு செய்து உள்ளிருந்தாரை உண்பித்து வந்தனர். இவர் இங்ஙனம் செய்த செயலை நக்கீரரும் ஔவையாரும் கூடக் குறிப்பிட்டுள்ளனர்.

இவரது பாடல்களில் பலப்பல அரிய கருத்துக்கள் காணக்கிடைக்கின்றன. தலைவி ஒருத்தி தன் அன்புடைத் தலைவனை கணவன் செய்வன யாவும் இன்பந் தருவன என்றும், அவன் இன்னா செய்யினும் அது விண்ணுலக இன்பத்தினும் சிறந்தது என்றும் கூறும் பகுதி கற்புடை நங்கையின் கடப்பாட்டைக் காட்டும் இடம் அன்றோ? மாதர்கள் தம்தம் கணவன்மார் இடத்தில் வைத்த அன்பினை அவர்கள் தம் தாய்மார் வீட்டில் இருந்து உண்ணும் பால் உணவிலும், தம் கணவன்மார் குடிசையில் உண்ணும் நீர் உணவையே சீரியதாகக் கருதினர் என்று கூறியுணர்த்தினர். இன்னோர் அன்ன கருத்துக்களைக் கபிலரது பாடல்களில் நீங்களே படித்து உணர்வீர்களாக. இவரது செய்யுள்கள் இனிமையுடையன என்பதைக் கபிலரது பாட்டு என்று கூறப்பட்டு வரும் தொடர் மொழியிலும் நன்கு உணரலாம்.

இவர் இன்னா நாற்பது என்னும் நீதிநூல் ஒன்றையும் பாடியுள்ளார். அது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் இணைக்கப்பட்டுள்ளது. கபிலம்' என்னும்

நூலும் இவரால் பாடப்பட்டது என்பதும் தெரிய வருகிறது.

திருவள்ளுவரையும் அவர் செய்த நூலையும் போற்றாத புலவர் இலர். ஆகவே, கபிலரும் திருக்குறளைச் சிறப்பித்துப் பாடிய பாடல் திருவள்ளுவமாலை என்னும் நூலில் உள்ளது. அந்நூலில், திருக்குறள் நூலில் உள்ள பாக்கள் குறள் வெண்பாவாலானவை ஆயினும், தம்முள் பெரிய கருத்துக்களைக் கொண்டுள்ளன என்று பாடியுள்ளார்.

இவரது தோழர் பாரியே என்றாலும், புலமை காரணமாகப் பரணர்தாம் இவருக்கு நெருங்கிய தோழர் ஆவார். அதனால்தான், கபில பரணர் என்ற தொடரும் உலவி வருகிறது. இடைக்காடரும் கபிலர் நண்பர் தாம். இதனைப் 'பின்னம்இல் கபிலன் தோழன் பெயர் இடைக் காடன் என்போன்' என்று திருவாலவாய் உடையார் திருவிளையாடற் புராணம் கூறுதல் காண்க.

இத்தகைய பெரியார் பெண்ணையாற்றங்கரையில் தீ வளர்த்து அதில் மூழ்கி உயிர் விட்டனர் என்பர். இது திருக்கோவலூர் சாசனம் ஒன்றால் அறிய வருகிறது. இவர் உயிர் துறந்த இடத்தில் 'கபிலக் கல்' எனப்படும் ஒரு கல்லும் இருக்கிறது.

# 4. தமிழக விழாக்கள்

தமிழ் நாடு தனிப்பெருஞ் சிறப்புடையது. தன்னேரில்லா வளமே இத்தகவுக்குக் காரணம். வளம் என ஈண்டுக் குறிப்பிட்டது ஒரு வளத்தைப் பற்றி மட்டும் அன்று. நில வளம், நீர் வளம், குடி வளம், கோன் வளம் முதலான பல வளங்களையுமே ஆகும். இன்னோரன்ன வளங்கள் மலிந்து இருந்தமையினால்தான் இந்நாட்டு மக்கள் இன்பும் இறை அன்பும் ஒருங்கே உடையவர்களாக இருந்தனர்; இருந்து வருகின்றனர்; இனியும் இப்படியே இருப்பர். இஃது உண்மை. வெறும் புகழ்ச்சி அன்று.

இவ்வாறு இன்பும், இறை அன்பும் தமிழ் நாட்டு மக்கள் கொண்டிருந்தமையாலும், நாடும் எல்லா நலன்களும் ஒருங்கே பெற்றிருந்தமையாலும், மக்கள் இந்நாட்டில் விழாக்களைப் பெரிதும் கொண்டாடி வந்தனர் என்பது தெளிவாகின்றது.

இந்நாட்டில் திருவிழாக்கள் இடையறாது நடைபெற்று வந்தது என்பது நந்தம் செந்தமிழ் நூற்களின் வாயிலாகவும் நன்கு அறிந்துகொள்ளலாம். உலகம் புகழும் உத்தமப் புலவராம் திருவள்ளுவனார் 'சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு' என்று கூறியிருக்கும் குறட்பாவுக்குப் பொருள்கண்ட பரிமேலழகர் 'தேவர்கட்கும் இவ்வுலகில் மக்களால் செய்யப்படும் விழாவொடு கூடிய பூசை நடவாது மழை பெய்யாதாயின்' என்று எழுதிப்

போந்தார். இதனால் நம் நாட்டில் தேவர்கட்கு விழா நடைபெற்று வந்தது தேற்றமாம்.

புறநானூற்றில் விழாக்கள் இடையறாது கொண்டாடப்பட்டன என்று குறிப்பிடப்பட்ட செய்திகள் பல உள. 'மடியா விழவின் யாணர் நன்னாடு' என்கிறது அந்நூல். 'மடியா' என்னும் சொல்லுக்குப் பொருள் விளக்கிய அந்நூல் உரையாசிரியர் 'நீங்காத' என்றே உரை கூறிப் போந்தார்.

'இறையனார் அகப்பொருள்' என்னும் நூல் உரையிலும் விழாக்கள் நடைபெற்றுவந்தன என்று குறிப்பிடும் குறிப்பு உண்டு'. அந்நூல் பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம் என்னும் பழமொழிக்கு ஏற்பப் பல விழாக்களையும் கூறாது, சில விழாக்களை மட்டும் குறிப்பிட்டுப் பேசுகின்றது. 'ஆவணி அவிட்டமே, உறையூர்ப் பங்குனி உத்திரமே, கருவூர் உள்ளி விழாவே' என்பன அந்நூல் குறித்துக் காட்டும் விழாக்களாகும்.

தண்டமிழ் மரபில் அமைந்த அகப்பொருள் துறையில் ஊர் துஞ்சாமை என்னும் துறை ஒன்று உளது. அத்துறையின் பொருள் ஊரார் உறங்காமல் விழித்துக் கொண்டிருத்தல் என்பதாம். ஊரார் உறங்காமல் விழித்திருக்கின்றமைக்குக் காரணம் யாது? அவ்வவ் வூரில் விழாக்கள் குதூகலமாகக் கொண்டாடப்பட்டமையினால், அக்களிப்பில் ஆழ்ந்தும், விழாவினைக் கண்டு மகிழ்ந்து வந்ததுமே ஆகும். இதனைச் சீர்காழிக் கோவை,

மலைவிதி சென்னிகைக் கொண்டார்மெய் அன்பின் வழிகழியா
நிலைவிதி யேத்தும் பிரம புரேசர் நிறைவிழாவோ
கலைவிதி யாமவர் கூத்தோ நகர்கண் படாததற்கென்
தலைவிதி யேஒரு பாழ்ங்கூத் துருக்கொடு சார்ந்ததுவே

என்று கூறுகிறது.

இத்தகைய விழாக்கள் ஊர்களில் இடைவிடாமல் நிகழ்ந்து வந்தன என்பதைப் புறநானூறு மடியா விழவின் யாணர் நன்னாடு என்று குறிப்பிடும் ஆற்றால் நன்கு விளங்கிக்கொள்ளலாம். மக்கள் அவ்விழாவில் பெரிதும் கலந்துகொண்டு தம்மால் ஆன உதவிகளைச் செய்யப் போவார் என்பதைச் ‘சாறுதலைக் கொண்டென’ என்னும் அடியால் நன்கு உணரலாம். இத் தொடருக்குப் பொருள் கூறவந்த உரையாசிரியர், ‘ஊரின்கண் விழாத் தொடங்கிற்றாக, அவ்விழாவிற்கு உதவப்போகவும்’ என்று உரை எழுதிப் போந்தார். அவ்விழாக் காலங்களில் ஊரில் ஒரே இரைச்சல் நிறைந்திருக்கும் என்பதை ‘கல்லென் விழவு’ என்ற புறநானூற்றுத் தொடரால் அறிந்துகொள்ளலாம். கல் என்பது ஓசையை உணர்த்தும் ஓர் இடைச்சொல்.

இவ்வாறு அன்பர்களால் நிகழ்த்தப்பெறும் திருவிழாவில் இறைவன் உலாப் போதல் அழகை உலாப் பிரபந்தங்களின் மூலமும் அறிந்து இன்புறலாம். ஒன்பதாம் திருமுறையாம் திருவிசைப்பாவில் இறைவர் திருவிழாவில் உலாப்போந்து அன்பர்கட்குக் காட்சி தரும் கவினை,

"நையாத மனத்தினனை நைவிப்பான் இத்தெருவே
ஐயாநீ உலாப்போந்த அன்றுமுதல் இன்றுவரை
கையாரத் தொழுதருவி கண்ணூரச் சொரிந்தாலும்
செய்யாயோ அருள்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே

என்ற திருப்பாடலால் தெரிந்துகொள்ளலாம்.

இத்தகைய விழாக்கள் ஊர்தோறும் கொண்டாடப்பட்டது என்பதைத் திருமுருகாற்றுப்படை 'ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவு' என்று செப்புகிறது.

திருவிழாவில் இறைவன் சிறப்புறத் திகழ்ந்து ஆண்டுத் தன்னை வெளிப்படுத்தித் திகழ்வன் என்பதையும் திருமுருகாற்றுப்படை,

'சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி'

என்னும் அடி அறிவித்து நிற்கிறது. இவ்வாறே சிலப்பதிகாரமும் 'சாறயர் களத்தில் வீறுபெறத் தோன்றி' என்று மொழிகிறது.

இன்னோரன்ன குறிப்புக்கள் நந்தம் செந்தமிழ் நூல்களில் பலவாறு குறிப்பிட்டுள்ள அருமை பெருமைகளுக்கிணங்கப் பாலரு வாயராம் ஆளுடைப்பிள்ளையார் திருமயிலைப் பதிகத்தில் அக்கோயிலில் இடையீடின்றி நடந்துவந்த திருவிழாக்களைக் குறிப்பிட்டே பாடியுள்ளார்.

அப்பதிகம் அங்கம் பூம்பாவை என்பாள் இறந்து எலும்பாகிக் கிடந்த நிலையில் அவளை உயிர் பெற்று எழுமாறு செய்யும் பேரருள் திறத்தால் பாடப்பட்டது. இது பூம்பாவைக்காகவே பாடப்பட்டது என்பது திருக்

கடைக் காப்பினுள் வரும் 'பூம்பாவைப் பாட்டாக' என்ற தொடரால் விளங்கும். 'போதியோ பூம்பாவாய்' என்று பாடல் தொறும் வரும் தொடரும் இதனை விளக்கி நிற்கிறது. இங்ஙனம் பாடப்பட்ட பதிகத்துள் பதினொரு பாடல்கள் உள்ளன. முதல் பத்துப் பாடல்கள் பதிகம் என்ற பெயர்க்கு ஏற்ப அமைந்து உள்ளன. இறுதிப் பாடல் திருக்கடைக் காப்பு என்பதற்கு ஏற்பப் பதிகப் பயன் உணர்த்தும் பாடலாக அமைந்துள்ளது.

இப்பதிகத்தின் வாயிலாகப் பல அரிய பெரிய குறிப்புக்கள் நமக்குப் புலனாகின்றன. இதன் மூலம் திருமயிலையின் தனிச்சிறப்பும் அந்நாட்டின் நீர் வளனும் நிலவளனும், மக்கள் இயல்பும் திருமயிலை ஆலயத்தில் கொண்டாடப்பட்ட திருவிழாக்களும், அடியார்கட்கு அன்னம் இட்டு அகங்களிக்கும் அருந்தொண்டும் தெரியவருகின்றன.

சென்னைத் திருமயிலைபப்பதியின் முழுப்பெயர் மயில் ஆர்ப்பு ஊர் என்பது. இச்சொற்களைப் புணர்த்திக் கூறுங்கால் மயிலார்ப்பூர் என்று ஆகும். மயிலார்ப்பூர் என்பது நாளடைவில் மயிலாப்பூர் என்று வழங்கப் பட்டு, அதன்பின் மயிலை என மருவி வழங்கலாயிற்று. மயிலையம்பதி சோலை மிக்க பதியாதலின். மயில்களின் ஆர்ப்புக்கு (ஒலிக்கு) இடமாயிற்று. மேலும், கற்ப காம்பிகை மயில் வடிவுகொண்டு கபாலிப்பெருமானைப் பூசித்த காரணத்தாலும் இது மயிலாப்பூர் என்றும் ஆயது. இப்பதி புன்னைமரங்கள் நிரம்பப்பெற்றுக் கடற் கரைச் சோலைகளையுடையது என்பதை ஞானசம்பந்தப் பெருமானார் தமது பதிகத்தில் எடுத்த எடுப்பில் 'மட்

டிட்ட புன்னையங்கானல் மடமயிலை' என்று கூறுமாற்றால் தெளியலாம். மயில் குறிஞ்சிக் கருப்பொருளே ஆயினும் அது கானலில் (கடற்கரைச் சோலையில்) உலவாமற் போயினும் புன்னை மரங்களில் வாழும் இயல்பு இருத்தலின் மயிலை மயில்கட்கு இடமாயிற்று என்க. இதனால் திணைமயக்கம் கூறியவாறும் ஆயிற்று. மடமயில் என்றார், ஆண்டு உள்ளார் இளையராய் எழிலுடையராய் இருத்தல் பற்றி எஃக திருமயிலையின் கோயிற்பெயர் 'கபாலீச்சுரம்' என்பது. அது 'கற்றார்கள் ஏத்தும் கபாலீச்சுரம்' என்னும் தொடரால் அறிய வரும் உண்மையாகும். இங்குள்ள மாதர்கள் மைதீட்டப்பட்ட கண்ணராய்க் கவினுடன் திகழ்வர் என்பதையும் பதிகத்தில் காணலாம். 'மைப்பயந்த ஒண்கண் மட நல்லார்' என்றும், மைப்பூசும் ஒண்கண் மடநல்லார்' என்றும் கூறும் அடிகளில் காண்க. அவர்கள் கண் மை தீட்டத் தீட்ட ஒளி மங்காது, இக்காலத்தைப்போல மூக்குக் கண்ணுடியும் வேண்டாது திகழ்ந்தது என்பதை 'ஒண்கண்' என்னும் தொடர் விளக்கி நிற்கிறது. அவர்கள் கைகள் வளையல்கள் அணியப்பட்டு வசீகரத்துடன் துலங்கின. இதனை ஞானசம்பந்தர் 'வளைக்கை மட நல்லார்' என்று கூறிப் புலப்படுத்தினர்.

மயிலையம்பதி கடற்கரைப் பட்டினத்தைச் சார்ந்தது என்பதைக் 'கானல் மடமயிலை' என்றும், 'ஊர் திரை வேலை உலாவும் உயர் மயிலை' என்றும் கூறும் ஆற்றால் தெளியலாம். இஃது இங்ஙனம் கடற்கரை அருகே இருத்தலால, அக்கரை அருகே வாழும் வலைஞர்கள் தம் குலத்தொழிலாகிய மீன் பிடிக்கும் தொழிலில் ஈடுபட்டு வேல் கொண்டு மீனை வெட்டி வீழ்த்திக்

கொணர்ந்து சேரியில் வாழ்வார் என்பதை 'கூர்தருவேல் வல்லார் கொற்றம்கொள் சேரி' என்ற அடி நமக்கு அறிவிக்கிறது. ஈண்டு வேல் என்பது வெட்டும் கருவியே ஆகும். குத்தும் கருவியாகக் கொள்ளினும் கொள்க. இன்றும் நாட்டுப்புறங்களில் நீர் நிலைகளில் உள்ள மீன்களை வலைகொண்டு பிடிப்பதோடு இன்றி, இருப்புத் தகடுகளைக்கொண்டு வெட்டி வீழ்த்திப் பிடித்து வருதலைக் கண்கூடாகக் காணலாம். மயிலைக் கானல் சோலைக்கே இருப்பிடம் என்பதற்கு இல்லை. மடல் ஆர்ந்த தென்னைமரச் சோலைகளுக்கும் இருப்பிடமாகும். கானலேயாயினும் கவினுறு தென்னங் காவேயாயினும் ஆண்டெல்லாம் மேகம் தவழ்ந்தே காணப்படும். இதுகுறித்தே ஆசிரியர் 'கார்தரு சோலை' என்றார். மரமும் செடியும் புதரும் நிறைந்து இருளாக இருந்தமையின் கருஞ்சோலை என்றும் அச்சோலை அவரால் சிறப்பிக்கப்பட்டது. அச்சோலை மணம்மிக்க மலர்களையும் கொண்டமையால் கான்அமர் சோலையும் ஆயிற்று. இத்தகைய இயற்கை வளனுக்கு இடையே கபாலீச்சுரம் அமைந்திருத்தலின் இதனைக் 'கார்தரு சோலைக் கபாலீச்சுரம் என்றும், 'கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச்சுரம்' என்றும், 'கானமர் சோலைக் கபாலீச்சுரம்' என்றும் போற்றுவார் ஆயினர்.

மயிலையைப்பற்றித் திருஞானசம்பந்தருக்கு நல்ல மதிப்பு இருந்திருக்கிறது. இதனை அவர் 'மாமயிலை' என்றும், 'உயர் மயிலை' என்றும், 'கண் ஆர் மயிலை' (இடம் அகன்ற) என்றும் கூறுவாராயினர்.

இத்தகைய சிறப்பு மயிலைக்கு இருப்பதால்தான் போலும் இவ்விடத்தை விருப்பம் கொண்டு இறைவன்

வீற்றிருத்தற்குரிய இடங்களில் ஒன்றாகக் கருதினன் என்க. இதனை இப்பதிகம் 'மயிலை இட்டம் கொண்டான்' என்று குறிப்பிடுவது காண்க. எனவே, இது காறும் கூறிவந்த காரணங்களால் மயிலையின் வளம் இன்னது என்பதைக் கண்டோம்.

மயிலை வளமுடையதாக மட்டும் இருந்தது என்பது கூறுதற்கு இல்லை. அவ்வளத்தைப் பயன்படுத்தும் முறையிலும் அமைந்திருந்தது அம்மயிலை என்பதை யும் மாண்பையும் ஆண்டு நிகழும் செயல்முறைகளைக் கொண்டு நமக்கு விளக்குவாராயினர் பாலறா வாயினர்.

ஆண்டு வாழ்மக்கள் அடியார்களுக்கு அன்ன மிட்டுக் களிப்புற்றனர் என்பதை உருத்திர பல்கணத் தார்க்கு அட்டு இட்டு வந்தனர் என்றும், அருந்தவர் கள் உண்டு களிக்கும் வகையில் உணவு அளித்தனர் என்றும் அறிவிக்கும் தொடர்களாகிய 'உருத்திர பல்கணத்தார்க்கு அட்டு இட்டல்' என்ற அடியினைக் கொண்டும் 'அருந்தவர்கள் துய்ப்பனவும்' என்ற அடி யினைப் படித்தும் அறிந்துகொள்ளலாம். அங்ஙனம் உணவு கொண்டவர்கள் இறைவனோடு ஒன்றிக் கலந்த கலப்புடையவர்களாய், பண்புடையவர்களாய், அருமை யான தவமும் உடையவர்களாய் இருந்தனர் என்பதை நாம் ஈண்டே அறிய 'ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தர்' என்றதனாலும், 'அருந்தவர்கள்' என்றத னாலும் தெளியவைத்தனர் தோணிபுரத் தோன்றலார்.

இத்தகைய பண்புடையவர்கட்கு இடப்பட்ட உணவு நல்ல நறுநெய்யோடு கூடிய நல்ல உணவு என் பதை 'நெய்ப்பூசும் ஒண்புழுக்கல்' என்ற தொடரே

விளக்கி நிற்கும். நெய்யில்லா உண்டிப் பாழ்' ஆதலின் ஒண்புழுக்கல் மூடும் அளவுக்கு நெய்யை நிரம்ப ஊற்றி னர் என்க. இன்றேல் 'நெய்ப்பூசும் ஒண்புழுக்கல் என் பரோ' (பூசும்—மூடும்) 'மூட நெய்பெய்து முழங்கை நெய்வார' என்றனர் ஸ்ரீ ஆண்டாள் அம்மையாரும். ஆக இதுவரையில் கூறிவந்த காரணங்களால் திருமயிலையில் அடியார்கட்கும் ஏழைகட்கும் உணவு அளித்து வந்த சிறப்பை ஓர்ந்தனம். இனி அடுத்தாற்போல அவ்வூரில் திருவிழாக்கள் மலிந்து கொண்டாடப்பட்ட சிறப்பினை யும் இனிச் சிந்திப்போமாக.

திருமயிலை விழாவுக்குப் பேர்போனது என்பதைத் தோணிபுரத் தோன்றலார் 'மலிவிழா வீதி மாமயிலை' என்றும், கலிவிழா' என்றும் கூறும் ஆற்றால் தெளிய லாம். இவ்விழா மக்களின் கலியை (வறுமையினை) நீக்கும் விழாவாதலின் 'கலி விழா' என்றனர். பேர் ஆரவாரத்துடன் நடப்பது ஆதலின் 'கலி விழா' என் றனர் எனினும் அமையும். இவ்விழாக் காலங்களில் அருட்பாடல்கள், பக்திச்சுவைப் பாடல்கள் பக்தர்க ளால் பாடப்பட்டு வந்தன என்பதை 'பலிவிழாப் பாடல்செய்' என்றும் அறிவிக்கும் ஆற்றால் உணர லாம். விழாவில் ஓரே இன்ப ஆரவாரம் நிறைந்திருந் தது என்பதை 'ஒலி விழா' என்றும் பாடியிருப்பது கொண்டும் பார்த்துக்கொள்ளலாம்.

பொதுவாக விழாக்கள் மலிந்த மயிலை என்று குறிப்பிட்டதோடு நில்லாது, இன்னன்ன திருவிழாக் களும் அம்மயிலையம்பதியில் நிகழ்த்தப்பட்டன, கொண் டாடப்பட்டன என்பதையும் சிரபுரச்செம்மல் செப்பிப் போந்தனர்.

அப்பெருமானார் தமது திருமயிலைப் பதிகத்தில் குறிப்பிடும் திருவிழாக்கள் ஓண விழா, விளக்கீடு, ஆதிரைநாள், தைப்பூசம், கடல் ஆட்டு, உத்திர நாள், அஷ்டமி நாள், பொன் தாப்பு, பெருஞ்சாந்தி என்பன.

திருவோண விழா என்பது ஐப்பசித் திங்களில் திருவோண நட்சத்திரத்தில் கொண்டாடப்பட்டது என்பது ஐப்பசி ஓண விழா என்று கூறப்பட்டிருப் பது கொண்டு உணரலாம். விளக்கீடு என்னும் திரு விழா கார்த்திகை மாதத்தில் கிருத்திகை நட்சத்திரத் தில் கொண்டாடப்பட்டது என்பதை 'கார்த்திகை நாள் விளக்கீடு' என்னும் தொடரைக்கொண்டு உணர லாம். விளக்கீடு என்பது வரிசையாக விளக்கை ஏற்றி வழிபடும் திருவிழா. இதுவே இக்காலத்தில் 'கார்த் திகைத் தீபம்' என்று வழங்கி வருகின்றது. விழாக்கள் ஆண் பெண் என்னும் இருபாலார்க்கும் பொதுவே ஆயினும், சிற்சில விழாக்கள் பெண்களுக்கே உரித்தாகி அவர்களாலேயே சிறப்புறக் கொண்டாடப்பட்டு வரு வதையும் ஈண்டே நினைவுபடுத்திக்கொள்ளவேண்டும். அத்தகைய முறையில் பெண்களுக்கு உரிய நிலையில் கார்த்திகை விளக்கீட்டு விழாவும் ஒன்றாகும். இதனைக் காழிப்பிள்ளையார் கவினுற 'தையலார் கொண்டாடும் விளக்கீடு' என்று கண்ணியமாய்க் கூறியுள்ளார். இவ் விழா "ங்க நூல்களிலும் பல இடங்களிலும் கூறப் பட்டுள்ளது. இதனை, 'கலிகொள் ஆயம் மலிபு தொகுபு எடுத்த அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி' என்றும், (அஞ்சுடர் நெடுங் கொடி — கார்த்திகை விளக்கீடு).

"அறுமீன் சேரும் அகல்இருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர"

என்றும் அகநானூறு கூறுகிறது.

திருவாதிரைத் திருவிழா மார்கழி மாதத்தில் திருவாதிரை நட்சத்திரத்தில் கொண்டாடப்பட்டது. பதிகத்தில் மார்கழி மாதத்தில் இது கொண்டாடப்பட்டது என்பதற்குரிய சொல் இல்லையாயினும், கார்த்திகை மாத விழாவுக்குப் பிறகு இந்த விழாவினைக் குறிப்பிடப் பட்டிருப்பதாலும், அடுத்த பாடலில் தைப்பூசம் எனக் குறிப்பிட்டிருப்பதாலும் இது மார்கழி மாதத் திருவிழா என்பது பெறப்படுகிறது. 'மார்கழி நீராடேலோர் எம் பாவாய்' என்பது திருவாசகம். இந்த விழாவும் பெண்களால் பெரிதும் கொண்டாடப்பட்டது என்பதே தேற்றம். 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால் நீராடப் போதுவீர்' என்று ஸ்ரீ ஆண்டாள் பெண்களை நோக்கிப் பாடி இருப்பதாலும் அறியலாம் இந்த விழாவைப் பற்றிய குறிப்புக்களும் சங்கநூலில் உண்டு. 'மாயிரு திங்கள் மறுநிறை ஆதிரை விரிநூல் அந்தணர் விழவு தொடங்க' என்று பரிபாடல் பகர்கிறது. பூச விழா தை மாதத்தில் பூச நட்சத்திரத்தில் கொண்டாடப்படுதலை 'தைப்பூசம்' என்றே இஃது இந்நாளிலும் குறிக்கப்பட்டு வருதலாலும், பதிகத்திலும் இத்தொடரே அமைந்திருப்பதாலும் தெரிந்துகொள்ளலாம். இந்நாளில் நல்ல நறுநெய் கலந்து வெண்பொங்கல் நைவேத்தியம் செய்யப்படுவது என்பதை, 'நெய்ப்பூசும் ஒண் புழுக்கல்' என்ற தொடர் கொண்டு உணரலாம்.

இவ்விழாவும் தொன்றுதொட்ட விழாவாகும். இது பற்றிய குறிப்பும் சங்கநூலில் காணப்படுகிறது. இந் நாளும் மாதர்களுக்கே உரியதாகவும் அச்சங்க நூற் களைக்கொண்டு உணரலாம்.

'தாயருகா நின்று தவத்தைந்நீர் ஆடுதல்' என்பது பரிபாடல். தவத்தைந்நீர் என்று சிறப்பிக்கப்பட்டது கொண்டு இவ்விழாவின் சிறப்பை ஓர்ந்து கொள்ள லாம். கடலாட்டு விழா என்பது மாசிமக விழா வாகும். இது மாசி மாத விழா என்பதை, 'மாசிக் கட லாட்டு' என்ற தொடர் பதிகத்தில் அமைந்து இருத்தல் கொண்டு அறிகிறோம், இதுவே 'முந்நீர் விழவு' எனப் புறநானூறு புகல்கிறது. இது மக நட்சத்திரத்தில் கொண்டாடப்படுவது.

உத்திர விழா என்பது பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் கொண்டாடப்படுவது. இவ்விழாவும் பழைய விழாவாகும். இதுபற்றிய குறிப்புக்களும் சங்க நூலில் உண்டு.

'உறந்தை யாங்கண்.......பங்குனி முயக்கம்' என்று அகநானூறு கூறுகிறது. தொடக்கத்தில் இவ்விழா வைப்பற்றி இறையனார் களவியல் உரையில் கூறப் பட்டிருத்தலையும் நினைவு கொள்வோமாக.

அட்டமி நாள் விழா சித்திரை மாதத்தில் கொண் டாடப்பட்டிருக்கவேண்டும். பங்குனி விழாவிற்குப் பின் இவ்விழாக் குறிப்பிடப்பட்டிருப்பதனால் இவ்வாறு ஊகிக்க இடன் உண்டு. இதுவரையில் குறிப்பிடப் பட்டு வந்த விழாக்கள் நட்சத்திரத்தை ஒட்டி இருந்தன. இது திதியை ஒட்டியதாகும்.

4

இந்த விழா பதினெண் கணங்களால் இறைவனை வழிபட்டுக் கொண்டாடப்பட்டது என்பது தெரிகிறது. திருஞானசம்பந்தர் இவ்விழாவினைக் குறிப்பிடும்போது 'பண்ணூர் பதினெண் கணங்கள் தம் அட்டமி நாள்' என்று குறிப்பிட்டுள்ளார். பொற்றூப்பு விழா என்பது பொன்னூசல் விழாவாகும். இது வைகாசி மாதத்தில் கொண்டாடப்பட்டதாகத் தெரிகிறது. சித்திரை அட்டமி விழாவுக்குப் பிறகு இது குறிப்பிடப்பட்டது கொண்டு அறியவரும் குறிப்பு ஆகும். பொற்றூப்பு என்பது பொன்னால் அமைந்த ஊஞ்சலில் இறைவனை அலங்கரித்துக் கண்டு களிக்கும் காட்சி ஆகும். பொன் + தாம்பு = பொற்றூப்பு. தாம்பு என்பது தாப்பு என்று ஆயது, வலித்தல் விகாரம் பற்றி என்க.

'வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வரும்செய்யுள் வேண்டுழி'

என்பது இலக்கணம். தாம்பு—கயிறு. ஊசலுக்குத் தாம்பு இன்றியமையாதது ஆதலின், அதனையே முதன்மையாகக் கூறினர் முத்தமிழ் விரகர். சங்கர நமச்சிவாயர் பொருள் கோள் வகையில் ஒன்றான தாப்பிசைப் பொருள் கோளுக்கு உரைகூறும்போது, "இவற்றுள் தாப்பிசை என்பதற்கு ஊசல் போல் இடைநின்று இருமருங்கும் செல்லும் சொல் என்பது பொருள். தாம்பு என்பது ஊசல்" என்று எழுதிப்போந்ததை ஈண்டு அறிவோமாக. வைகாசி மாதம் வேனிற்காலம் ஆதலின், அக்காலத்தில் ஆண்டவனை ஊசலில் அமர்த்திக் கொண்டாடுதல் மரபாயிற்று. இவ்வழக்கம் இருந்ததனால்தான் மணிமொழியாரும் தம் திருவாக்கில் 'திருப்பொன் ஊசல்' என்னும் தலைப்பிலும் பாடல்களைப் பாடுவாராயினர்.

இறுதியாகச் சண்பையர்கோன் குறிப்பிட்டிருக்கும் திருவிழா சாந்தி விழா என்பது. இதுவே பவித்திரோற்சவம் எனவும் பகரப்படும். இதுகாறும் ஆண்டவன், திருவிழாக்களில் ஈடுபட்டு இருந்தமையின், அவனைச் சாந்தமாக ஆலயத்தில் அமர்த்திச் சாந்தி (அமைதி) நிலையில் கொண்டாடுவது குறித்து இஃது இப்பெயர் பெற்றது. ஆண்டவனுக்கு நமக்குள்ளதுபோன்றசிரமம் எதுவும் இல்லை ஆதலின் சாந்தி தேவை இல்லை என்றாலும், நமது விழைவே விழாவாதலின் இம்முறையில் எண்ணிச் சாந்தி விழாக் கொண்டாடினர். இவ்விழா ஒருநாள், பத்து நாள் விழாவாக இன்றித் தொடர்ந்து பன்னாட்கள் வரையில் கொண்டாடப்பட்டமையின், இதனைப் பெருஞ்சாந்தி என்றே அடைகொடுத்துப் பேசினர்.

எத்துணை விழாக்களைக் கொண்டாடினாலும், அவ்விழாக்களில் வரும் அடியவர்கட்கு ,உண்டி கொடுத்து உபசரிக்க வேண்டும் என்பதை வற்புறுத்தவே சிரபுரச் செம்மலார், மயிலைப் பதிகத்தில் எடுத்த பாட்டிலேயே இந்தக் குறிப்பைக் குறிப்பிடுவாராயினர். இந்தக் குறிப்புத் தம் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து இருக்கும் காரணத்தினால்தான் அப்பாட்டில் எந்தவிதமான திருவிழாக்களையும் குறிப்பிட்டுக் காட்டாது அடியார்களுக்கு அமுது செய்தலையே அறிவித்துப் போந்தார்.

இதுவரை கூறிவந்த கருத்துக்கள், தமிழகத்தில் பல திருவிழாக்கள் கொண்டாடப்பட்டு வந்தன என்பதும், திருமயிலையில் திருவிழாக்கள் திங்கள் தோறும் கொண்டாடப்பட்டு வந்தன என்பதும், அவ்விழாக் காலங்களில் அடியவர்களுக்கு அமுது படைக்கப்பட்டு வந்ததும் என்பதும் ஆகும்.

---

# 5. குறள் தரும் இன்பம்

உலகம் புகழும் உத்தமராகிய திருவள்ளுவப் பெருந்தகையார் யாத்த தனிப்பெரு நூலாம் திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பிரிவினை யுடையதாகி, இல்லற, துறவற நெறிகளை அறத்துப் பாலிலும், அரசியல் அமைப்பு, பொருளாதார அமைப்புக்களைப் பொருட்பாலிலும் கூறிக் காதலர் காதலியர் களின் உளம் ஒத்த அன்புடைமை, வாழ்க்கைநிலை ஆகிய இன்ப இயல்புகளை இன்பத்துப் பாலிலும் கவினுறப் பேசிச் சென்றுள்ளமையினைப் பலரும் அறிந்திருக்கின்றனர்.

இன்பத்துப்பால் காதலர் காதலியர் இன்பப் பகுதியினை அடிப்படையாகக்கொண்டு பேசப்படுவ தேனும், பொய்யில் புலவராம் செந்நாப்போதார் அந்நிகழ்ச்சிகளை நனிநாகரிக முறையில் நவின்று சென்றிருக்கும் வன்மை, எத்தகையவராலும் பாராட்டாமல் இருக்க இயலாது. ஏன்? 'நோய் கொண்டாலும் கொள்ளலாம் நூறு வயதளவும், பேய் கொண்டாலும் கொள்ளலாம் பெண்கொள்ளல் ஆகாதே' என்று பெண்கள் சமூகத்தையே பெரிதும் வெறுத்துப் பேசிய துறைமங்கலச் சிவப்பிரகாச சுவாமிகளைப் போன்ற வீரத் துறவியர்களும் பாராட்டியே தீர்வர். அவர், தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் என்று போற்றுதல் காண்க.

பண்புமிக்க தலைமகன் பொருள் காரணமாகவோ, தூது காரணமாகவோ, ஓதற் காரணமாகவோ, மற்றும்

பல காரணங்களாலோ, சில நாட்கள் தன் உள்ளத்திற்கு இயைந்த தலைமகளைத் தணந்திருக்க நேரிடுகிறது. அதுசமயம், தன் பிரிவினை மெல்ல தன் தலைவிக்குக் கூறுகிறான். இவ்வாறு தன் கணவன் பிரிவினைக் கேட்ட தலைவி, அதுபோது எம்முறையில் தனது கருத்தைத் தன் காதலனுக்கு அறிவித்து அவன் போக்கைத் தடுக்க முயன்றாள் என்பதைத் திருவள்ளுவர் கூறும் முறையினைக் காண்க.

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை

என்பது தலைவியின் விடை.

இதன் கருத்து யாது? 'அன்ப, நீ என்னிடம் என்னைவிட்டுப் பிரிவதில்லை என்று கூறுவதாயின் கூறுக; சென்று பிரிந்து மீண்டும் வருவன் என்று கூறும் மொழிகளை நீ வரும் வரை உயிருடன் வாழ்பவர் உளராயின் அவர்களிடம் உரைக்க' என்பதன்றோ? இதன் உள் பொருள் என்னை? 'நீ என்னைத் தணந்தால் உயிருடன் வாழேன்' என்பதன்றோ? இவ்வாறு கூறுவதன் மூலம், தான் சிறிதும் காதலரைப் பிரிந்திருக்க இயலாது என்ற இன்பப் பிணிப்பை எத்துணை நாகரிகமாகத் தலைவி கூறியுள்ளாள் பாருங்கள்! ஈண்டுத் தலைவி கூறியதாகக் கூறிய குறட்பா அன்றோ, சைவ எல்லப்ப நாவலரைத் தாம் பாடிய அருணைக் கலம்பகத்தில்,

'ஆரும் விரும்பிய கல்விமேல் ஆசை
உமக்குள தாயிடின்
பாருற என்பொரு பாவையால் பாடிய
பாவவர் போலவே

நீரும் அருந்தமிழ் செப்பிடும் நீர்மை
அறிந்திவண் ஏகுவீர்
மேரு நெடுஞ்சிலை அத்தனார் வீறரு
ஞபுரி வெற்பரே'

என்று அருமையாகப் பாடியமைக்கச் செய்தது? இங்குக் குறிப்பிட்ட இப்பாடல், முன்னர்க் காட்டிய குறட்பாவின் பொருளை நல்ல எடுத்துக்காட்டுடன் விளக்கிக் காட்டும் முறையில் அமைந்துள்ளது. அதாவது, 'அன்பரே, நீர் யாரும் விரும்பிய கல்வி காரண மாக என்னைப் பிரிந்தேபோய் மீளவேண்டுமானால், நான் கூறும் கல்வியினையும் கற்று வருதல் வேண்டும். அதாவது, திருஞானசம்பந்தர் இறந்து எலும்பும் சாம்பருமாகக் கிடந்த மாதினைத் தம் அருட்கல்வியின் துணையால் 'பூம்பாவைப் பாட்டு' என்னும் பதிகத்தைப் பாடி உயிர்பெற்றெழச் செய்தார். அதுபோல உம் பிரிவால் யான் இறந்து, சாம்பரும் என்புமாக இருக்கை யில், நீர் அருட்கல்வி கற்றிருந்தால் என்னையும் உயிருடன் எழுப்பலாம் அன்றோ? ஆகவே, அதனையும் கற்று வருக' என்பதாம். இத்தகைய உண்மை அன்பு மிக்க காதலியைப்பிரிய எவர்க்கேனும் மனம் வருமோ?

இத்தகைப் பண்புடைய மாதர் திலகங்கள் மணந்து கொண்ட ஒரு பிறப்பில் மட்டும் தம் கணவன்மார் களைப் பிரிந்திருக்க உளம் கொள்ளார் என்று நாம் எண்ணிவிடுதல் கூடாது. அங்ஙனம் எண்ணப் பெரு நாவலர் பெருமானும் இடங்கொடுத்திலர். தம் உள்ளம் உவக்கும் முறையில் மணந்த காதலரைப் பிறவிகள் தோறும் பிரிந்திருக்க எண்ணாது சேர்ந்தே வாழ எண்ண முடையர் ஏந்திழைமார் என்பது வள்ளுவர் கருத்து.

இதனை எத்துணை நயம்பட நாயனார் நவில்கின்றார் பாருங்கள் !

அன்புற்ற இரு தம்பதிகள் இன்பமாகத் தனித்து உரையாடிக்கொண்டிருந்தனர். இவ்வின்பப் பொழுது போக்கில், தலைவன் 'கண்ணே ! உன்னை யான் சிறிதும் இப்பிறப்பில் பிரியேன்' என்றனன். இப்படித் தன் காதலன் கூறினால், காதலி என்செய்தல் வேண்டும் ? தன் மகிழ்நனைப் பாராட்டி மிகுதியும் மகிழ்ந்திருக்க வேண்டும் அன்றோ ? ஆனால், தலைவி ஆனந்தத்திற்குப் பதிலாக அழுகையினை மேற்கொண்டனள். இந்தக் காட்சியினையே வள்ளுவர்,

'இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள்'

என்று கூறினர்,

ஏன் தலைவி ஈண்டு ஆனந்தமுறாது, அழுது துன்புற்றனள் ? அழுகைதான் அவளது உண்மை அன்பை நமக்கு உணர்த்தி நிற்கிறது. 'அந்தோ ! இப்பிறப்பில் நம்மைப் பிரியேன்' என்றதனால் மறுபிறப்பில் நம்மைப் பிரிந்து விடுவார் போலும் !' என்று அவள் எண்ணிய எண்ணமே அவளை அழச் செய்தது என்க.

அன்பு மிக்க அருமைக் காதலர்கள் தமக்குள் உரையாடும்போது, மிகுந்த விழிப்புடன் உரையாடவேண்டும் என்றும் வள்ளுவர் தம் இன்பக் குறள் மூலம் எடுத்துக் காட்டுகிறார். இங்ஙனம் விழிப்புடன் பேசிற்றிலர் எனில், காதலர்கட்கு இடையே ஊடல் ஏற்படும் என்பது உய்த்துணரப்படுகிறது. இதற்குரிய எடுத்துக் காட்டை ஈண்டே காணலாம்.

பிரிவு காரணமாகப் பிரிந்து சென்ற காதலன் தனது அலுவல்களைத் தடையற முடித்துத் திரும்பி இல்லம் வந்துற்றனன். இல்லாளுடன் இன்பமாக உரையாடிக் கொண்டிருந்தனன். அந்தச் சமயம் தான் தணந்திருந்தபோதும் தன் காதலியை மறந்திலன் என்பதை உணர்த்த 'கண்மணி, நின்னை யான் உள்ளினேன்' என்றனன். இதில் என்ன தவறு உள்ளது? ஆனால், தலைவி, தன் தலைவன் 'நின்னை யான் உள்ளினேன்' என்று கூறியதைத் தவருகப் பொருள் கொண்டுவிட்டனள். அதாவது, 'என்னை மறந்து இருந்து, பின்னர் நினைவு வந்தபோது நினைத்தீர் போலும்!' என்பதாகப் பொருள் கொண்டு, அவனை விட்டுச் சிறிது விலகி ஊடலும் கொண்டனள். இதனையே,

'உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்று
புல்லாள் புலத்தக் கனள்' [என்னைப்

என்று வள்ளுவர் கூறியுள்ளார்.

ஆம்: உண்மைக் காதலி ஊடித்தான் தீர்வாள். தலைவன் பிரிந்திருக்கும் காலத்தில் தலைவி அவனைத் தன் உள்ளக் கோயிலில் அமைத்து இடைவிடாது நினைந்தவண்ணமாக இருக்கிருள். அவன் உள்ளத்தில் இருந்தாலும், உடன் இருந்து கூடிக் குலவாத காரணத்தால் துன்பம் ஏற்பட்டு உடல் மெலிவைக் காட்டும் அன்றே? இதனை உணர்ந்த தோழி தலைவியின் உடற் சோர்வைப் போக்க, 'தலைவி! இப்படி வருத்தம் மேற்கொண்டு உடற்சோர்வு படுதல் கூடாது. இதோ சூடாகப் பால் கொணர்ந்துள்ளேன். பருகிச் சோகம் தவிர்க' என்று கூறும்போது, தலைவி கூறிய கூற்ருக

வள்ளுவர் கூறியுள்ள குறட்பாவினைப் பார்க்கும்போது, நினைத்தேன் என்று தலைமகன் கூறினான் என்ற காலத்துத் தலைமகள் ஊடாமல் என்செய்வாள்? சூடான பாலைப் பருக மறுத்த தலைமகள் என்ன கூறினாள்?

'நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து'

என்று கூறினாள். இதன் பொருள் யாது? 'தோழி, என்மாட்டு வைத்த அன்பு காரணமாக, நீ சூடான பால் கொணர்ந்து என்னைப் பருகுமாறு செய்து, என் சோர்வைப் போக்க வழி காண்கின்றாய். ஆனால், நான் சூடான பாலைப் பருக அஞ்சுகின்றேன்; 'எற்றுக்கு அஞ்சுகிறாய்?' என நீ வினவலாம். என் உள்ளக் கோவிலில் என் காதலர் குடிகொண்டுள்ளார். நான் இந்தச் சூடான பாலைப் பருகின், என் நெஞ்சில் இருக்கும் அவர் வெந்து போவார் அல்லரோ? ஆகவே, எனக்கு இந்தச் சூடான பால் வேண்டியதன்று' என்று கூறினள். இவ்வாறு இருக்கத் தலைமகன் மட்டும் மறந்து மறந்து தலைவியை நினைத்தல் தவறுதானே?

தமிழ் நாட்டுத் தனிப்பெரும் மாதர்கள் காதலன்பால் தணியா அன்புகொண்ட அணங்குகள். எதைப் பொறுக்க எண்ணினாலும், தம் கணவன்மார் தம்மைத் தணந்து செல்வதையோ, பிற மாதர்பால் சிந்தை செலுத்துவதையோ சிறிதும் பொறுத்துக்கொள்ள ஆற்றல் இல்லாதவர் ஆவர். தம் கணவர் தம்முடனே இருக்கவே விரும்புபவர். பிற மாதர்களுடன் தம் கணவன்மார் உள்ளம் போகாதவாறு காதலிமார் பல முறை எச்சரிக்கை செய்தும் வந்திருக்கின்றனர். அப்

படிச் செய்திருக்கின்றனர் என்பதை அழகுற நம் வள்ளுவர் அறிவித்துள்ளார்.

மனமொத்த காதலர்கள் தனித்து உரையாடிக் கொண்டிருந்தனர். அந்தச்சமயம் தலைமகனுக்குத் தும்மல் வந்தது. தும்மினான். தும்மினபோது வாழ்த்துக் கூறுதல் நம் தமிழர் மரபு. அம்மரபுபடி தலைவியும் வாழ்த்தினாள். அப்படி வாழ்த்தியவள் உடனே மனம் மாறி அழத் தொடங்கினாள். பாவம்! தலைமகனுக்கு ஒன்றும புரியவில்லை. 'என்ன இது! கிணறு வெட்ட பூதம் புறப்பட்டதுபோல ஆய்விட்டதே!' என்று எண்ணி, தன் காதலி அழுததற்குக் காரணம் அறிய வேண்டி, 'என் உயிர் அனைய இன்பே! ஏன் அழுகின்றாய்? நான் தும்மினதில் என்ன தவறு?' என்று அன்பு கலந்த மொழிகளால் கேட்டனன். தலைவியும் தான் அழுதமைக் குக் காரணம் கூறுவாளாய் 'அன்பரே, நீர் என்னைத் தவிர்த்து வேறு யாருடனோ உறைந்து வருகின்றீர்! அத்தகையாள் நினைவு இப்போது வர, நீர் தும்மினீர். அன்புடையார் நினைவு வரும்போது தும்மல் வருதல் இயல்புதானே? ஐயோ! நம் காதலர்க்கு வேற்று மாதரும் ஏற்பட்டு விட்டனரே என்ற துக்கமே என்னை அழச் செய்தது' என்றனளாம். இந்தக் கருத்துடைய குறள் தான்.

,வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்துஅழுதாள்
யார்உள்ளித் தும்மினீர் என்று'

என்பது.

இதன்பின் தலைமகன் தன் காதலியிடம் தான் அவளைத் தவிர்த்து வேற்றுமாதர் எவரிடமும் வேட்கை

கொண்டிலன் என்று கூறிச் சமாதானப்படுத்திய நிலையில் மீண்டும் அவனுக்குத் தும்மல் வரத் தொடங்கியது. 'தும்மினால் மீண்டும் தலைவி பிணக்கம்கொள்ளக்கூடுமே. மீண்டும் சமாதானம் கூறவேண்டுமே' என்று எண்ணிய தலைமகன் வந்த தும்மலை எப்படியோ வர ஓட்டாமல் தடுத்துவிட்டனன். அப்படித் தடுத்தபோதும் தலைமகள் அவனை விட்டிலள். 'ஓகோ! உமக்கு வந்த தும்மலைத் தும்முதல் செய்யாமல், எனக்கு உம் நடத்தை உறுதிப்படாதிருக்கவேண்டும் என்பதற்காக அடக்கிவிட்டீர் போலும்! ஏன் உள்ளதை மறைக்கின்றீர்?' என்று கூறி அழுதாள் என்பதை,

'தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்திரோ என்று'

என்று குறள் அறிவித்து நிற்கிறது.

இங்ஙனம் எடுத்தவற்றிற்கெல்லாம் நம் தமிழ் நாட்டு மாதர் திலகங்கள் பிணக்கங் கொண்டதாக வள்ளுவனார் எடுத்துக் காட்டுகின்றார் எனில், அதன் உள்ளுறைப் பொருள் யாது என்பதைச் சிறிது ஆழ அழுந்தச் சிந்தித்தால், நம் நாட்டு மாதர், தம் கற்பினை மட்டும் காத்துக்கொள்ள விரும்பாமல் தம் கணவன்மார் ஒழுக்கமும் கெடாது இருக்கக் கவனித்து வந்துள்ளார் என்ற உண்மையும் உணரக் கிடைக்கின்றது. இதனால், இம்மாதர்கள் தம் கணவன்மாரிடத்தில் உண்மை அன்புகொண்டிருந்த நிலைமையும் புலனாகிறது அன்றோ?

இதனை மேலும் ஓர் உதாரணத்தால் கூறி இக்கட்டுரையினை முடிப்போமாக. அன்புமிக்க காதலர்கள்

இல்லறத்தினை இனிதின் நடத்தி வந்தனர். இங்ஙனம் நடத்தி வருகையில், தலைமகனுக்கு அவனது நண்பன் ஒரு புது இல்லம் அமைத்து, அப்புது வீட்டிற்கு நன்னாள் குறித்துப் புகும் விழா காரணமாக ஓர் அழைப்பிதழினை அனுப்பினன். பழங்காலத்தில் புது இல்லம் அமைப்பவர், அகத்தும் புறத்தும் சித்திரங்களாலும் சிற்பங்களாலும் அழகுபடுத்தி அமைப்பது வழக்கம். அத்தகைய புது அகம் புகும் அழைப்பு விழாவிற்குச் செல்ல எண்ணிய தலைமகன், தான் தனித்துச் செல்ல எண்ணுதவனாய் மனையாளையும் உடன் வரும்படி கூறினன். ஆனால், அத்தலைமகள் தான் வர இயலாது என்று கூறிவிட்டனள். சரி, 'ஏதோ வீட்டில் பல அலுவல்கள் இருக்கின்றன. அதன்காரணமாக அவள் வருதற்கு இல்லை போலும்!' என்று எண்ணி, மேலும் அவளை வற்புறுத்ாது, தான் போய்வருவதாகக் கூறிப் புறப்பட்டனன். தன் கணவரும் அவ்விழாவிற்குப் போதல் கூடாதென்ற தடை உத்தரவு போட்டனள் இல்லக்கிழத்தி. தலைமகனுக்கு ஒன்றும் புரியவில்லை. தானும் வர இயலாது; தன் காதலரும் போகக்கூடாது என்றுதலைமகள் கூறினுள் என்றால், அதில் ஏதோ ஒரு சீரிய நோக்கம் இருக்கவேண்டும் என்பது தெரிகிறதன்றோ? எனவே, அழைப்பினைப்பெற்ற தலைமகன் தன் வாழ்க்கைத்துணையாளை நோக்கி, 'அன்பே,! நீதான் வர மறுத்தாலும்,யான் போவதையும் தடைசெய்யலாமோ? நீ இவ்வாறு தடை செய்ததற்குக் காரணம் யாதோ?' என்று வினவியபோது, அவள் விடை இறுத்ததாகக் கற்பனை செய்து மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்கள் தாம் பாடிய 'நீதிமஞ்சரி' என்னும் நூலில் பாடியிருக்கும் பாடலைப் பாருங்கள். அது,

'ஓவியர்நீன் சுவர்எழுதும்
ஓவியத்தைக் கண்ணுறுவான்
தேவியையான் அழைத்திடஆண்
சித்திரமேல் நான்பாரேன்
பாவையர்தம் உருவெனில்நீர்
பார்க்கமனம் பொறேன்என்றாள்
காவிவிழி மங்கைஇவள்
கற்புவெற்பின் வற்புளதால்'

என்பது.

இப்பாடல் என்ன கூறுகிறது? 'என் அருமைக் காதலரே! நீர் காணச்செல்லும் புது இல்லத்தில் ஆண் பெண் ஆகிய உருவங்கள் நல்ல வண்ணத்தால் அமைக்கப்பட்டிருக்கும். அவ்வுருவங்களில் ஆண் உருவங்களை யான் காண இசையேன்; இதுவே யான் வராமைக்குக் காரணம். பெண் உருவங்களை நீர் பார்க்க யான் சகியேன். அதுவே, நீரும் செல்லுதல் கூடாதெனத் தடை செய்தமைக்குக் காரணம்' என்ற கருத்தை அன்றோ கூறுகிறது? இவ்வளவு பொருள் அமைய வேதநாயகம் பிள்ளை பாடினமைக்கு ஆதாரம் யாது? இப்படிப் பாடுதற்கு ஆதாரம் நம் வள்ளுவர் பாடிய இன்பத்துப் பாலேயாகும். ஆகவே திருக்குறளைப் பன்முறை படித்து உணர்ந்து குறள் தரும் இன்பத்தில் திளைப்பீராக. தமிழ் நாட்டு மாதர்களின் கற்பினை எண்ணி எண்ணி இறும்பூது எய்துவீர்களாக.

---

# 6. திருப்பாட்டின் திறன்

திருவளர்ந்தோங்கும் இப்பரதகண்டத்தே திகழும் செந்தமிழ் நாட்டில் உலகம் உய்யத் தோன்றியருளிய மூவர் முதலிகளான அப்பர், சம்பந்தர், சுந்தரர் மொழிந்த மொழிகள் தேவாரம் என்னும் பெயரால் வழங்கப்பெற்றும் போற்றப்பெற்றும் வருவதைப் பொதுவாகத் தமிழகமும், சிறப்பாகச் சைவ உலகமும் அறிந்ததோர் உண்மையாகும். ஆனால், மூவர் பாடல்களும் தேவாரம் என்று வழங்கப்பட்ட முறையில் கருத்து வேற்றுமை ஏற்பட்டிருக்கிறது என்பது சிற்சில காரணங்களால் நாம் சிந்திக்கவேண்டியவர்களாய் இருக்கின்றோம்.

திருநாவுக்கரசர் திருவாய்மலர்ந்தருளிய அருள் மொழி ஒன்றே தேவாரம் என்றும், திருஞானசம்பந்தரது திருவாக்குத் திருக்கடைக்காப்பு என்றும், சுந்தரமூர்த்திகளின் சொல் ஓவியங்கள் திருப்பாட்டு என்றும் வழங்கப்பெற்றனவாக எண்ண இடம் இருக்கிறது. இக்கருத்தினைத் திருத்துறையூர் சாந்தலிங்க சுவாமிகள் பாடிய நூற்களுக்கு உரை வகுத்த திருப்போரூர் சிதம்பர சுவாமிகளின் வாக்கினின்றும் நன்கு உணரலாம். வேண்டுவோர் அவிரோத உந்தியார், பதினேழாவது பாட்டின் உரையால் தெளிக. அருட்பிரகாச வள்ளலாராகிய இராமலிங்க சுவாமிகட்கும் இக்கருத்து உடன்பாடு என்பது, அவர் சுந்தரரைப் போற்றிப் பாடிய பாடல்களில் ஒன்றில் 'தேன் படிக்கும் அமுதாம் உன் திருப்பாட்டை' என்று குறிப்பிட்டுள்ளார்.

கற்பனைக் களஞ்சியமாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளும் 'படியிலாநின் பாட்டில் ஆரூர நனி விருப்பன் பரமன்' என்று ஆரூரது அருட்பாட்டை அறிவித்துள்ளார். இன்னோரன்ன காரணங்களால் திருப்பாட்டு என்பது சுந்தரரது பாட்டுத்தான் என்பது புலனாகிறது.

சுந்தரருடைய திருப்பாட்டு எல்லோராலும் நனி விரும்பும் தன்மையுடையது. அஃது அங்ஙனம் அமைந்த பாடல் என்பதை, முன் அமைந்துள்ள திரு என்னும் சொல்லே அறிவித்து நிற்கிறது. திரு என்னும் சொல்லிற்குப் பேராசிரியர் திருக்கோவையார் உரையில் 'கண்டோரால் விரும்பப்படும் தன்மை' என்று கூறியிருக்கின்றனர் அல்லரோ?

இறைவனார்க்கும் இவர் பாட்டில் பெருவிருப்பம் உண்டு என்பதைக் காரணங்காட்டி விளக்கினார் சிவப்பிரகாச சுவாமிகள். அப்பாட்டு,

படியிலா நின்பாட்டில் ஆரூர!
　　நனிவிருப்பன் பரமன் என்ப
தடியனே அறிந்தனன்வான் தொழும்ஈசன்
　　நினைத்தடுத்தாட் கொண்டு மன்றித்
தொடியுலாம் மென்கைமட மாதர்பால்
　　நினக்காகத் தூது சென்றும்
மிடியிலா மனைகடொறும் இரந்திட்டும்
　　உழன்றமையால் விளங்கு மாறே

என்பது. சுந்தரர் திருப்பாட்டில் விருப்பங்கொண்ட இறைவர் அவர்பொருட்டுப் பரவையார் ஊடல் தீர்க்கத் தூது சென்றார் என்றும், பசிதீரப் பிச்சை எடுத்து

வந்து அன்னம் இட்டார் என்றும் அன்றோ இவ்வெடுத்துக்காட்டுக் காட்டுகிறது. இதனை மேலு விளக்கும் வார் போல இராமலிங்க அடிகளாரும்,

இன்பாட்டுத் தொழிற்பொதுவில்
இயற்றுகின்ற எம்பெருமான்
உன்பாட்டுக் குவப்புறல்போல்
ஊர்ப்பாட்டுக் குவந்திலர்என்
றென்பாட்டுக் கிசைப்பினுமென் ?
இடும்பாட்டுக் கரணமெலாம்
அன்பாட்டுக் கிசைவதுகாண்
அருட்பாட்டுப் பெருந்தகையே'

என்று மனம் உவந்து பாடியுள்ளார்.

சுந்தரர் பாட்டை எப்பொழுதும் கேட்டுக் கொண்டு இருப்பதற்காகவே இறைவரும் இவரை ஆட்கொள்ளும்போதும்,

'மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை ; நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும் ; ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு' கென்றார் தூமறை பாடும் வாயார்'

என்று கட்டளையிட்டருளினார் போலும் !

இறைவனே விரும்பும் திருப்பாட்டை வன் தொண்டர் பாடும் திறன் பெற்றவராயின், இவரது கல்வி அறிவை நாம் அளந்து கூறமுடியாதன்றோ ?

இவர் கல்வியறிவின் ஆழத்தை நாம் இவர் பாடியுள்ள பாட்டினின்றும் நன்கு அறியலாம். இவர் பூகோளக்கலை அறிவை நன்கு பெற்றவர் என்பதற்குச்

சான்று இவர் பாடியுள்ள திருநாட்டுத் தொகைப் பதிகம் ஒன்றே சாலும். மிழலைப்பதி இப்பெயருடன் சிற்சில இடங்களில் இருப்பதால் இந்த நாட்டு மிழலை என உணர்த்த, மிழலை நாட்டு மிழலை. வெண்ணி நாட்டு மிழலை என்று வேறுபடுத்திச் சுட்டிய அறிவை என்னென்பது! இவ்வாறே அப்பதிகத்தில் சுட்டியுள்ள பல இடங்களையும் அறிந்து இன்புறுக. ஆக, இவர் எத்துணை நுட்பமாக ஒவ்வொரு நாடு நகரங்களை அறிந்துள்ளார் என்பதை நாம் உணர்கின்றோம். இவ்வாறே இவரது கல்விப் பரப்பின் ஆராய்ச்சிக்கு அரண் செய்யும் பதிகம் திருத்தொண்டத் தொகையாகும். அதில் பல காலத்தில் பல நாட்டில் பல தொண்டில் ஈடுபட்டவர்களைப்பற்றிய குறிப்புக்களைக் காண்கிறோம். அக்குறிப்புக்கள் இல்லையேல், நம்பியாண்டார் நம்பிகட்கோ சேக்கிழார் பெருமானார்க்கோ அடியார் வரலாற்றை ஆணித்தரமாக அறிவிக்க இயலாமல் போய் இருக்கும். 'அலைமலிந்த புனல் மங்கை ஆனாயர்' 'கடவூரில் கலயன்' என்று இவ்விரு அடியார்களின் ஊர் இன்ன என்பதையும், 'இல்லையே என்னாத இயற்பகை' 'வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருள்' என்னும் அடைகளால் இவ்வடியார்களின் உயிர் நிலையான உண்மைத்தொண்டினையும் எவ்வளவு அழகாகக் கூறியுள்ளார் பாருங்கள்! சம்பந்தர், திருநாவுக்கரசர் வரலாற்றை முற்றமுடிய அறிந்தவர் என்பது 'திருவீழிமிழலைப் பதிகத்தில் 'இருந்துநீர் தமிழோடிசைகேட்கும் இச்சையால் காசு நித்தல் நல்கினீர்' என்று குறிப்பிட்டிருப்பதில் இருந்து உணரலாம். திருநாவுக்கரசர் பதிகத்தினை இவர் முற்றும் படித்தவர் என்பதை

'இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவல் ஈன்றவன் திருநாவினுக்கரையன்' என்று திருநின்றியூர்ப் பதிகத்தில் குறித்துள்ளதிலிருந்து அறியலாம்.

சைவசமயப் பெருநூல்களே அன்றித் தொல்காப்பியம், சங்க இலக்கியம் போன்ற இலக்கண இலக்கிய நூல்களிலும் இவருக்குப் பெரும் பயிற்சி உண்டு என்பது இவருடைய திருப்பாட்டில் காணக் கிடைக்கும் குறிப்புக்களால் நன்கு புலனாகிறது. திருவாரூர்ப் பரவையுண்மண்டளிப் பதிகத்தில் 'எழுத்தோடு சொல் பொருள் எல்லாம் முன் கண்டானே' என்னும் தொடர் தொல்காப்பியப் பகுப்பாகிய எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் ஆகிய முக்கூற்றில் இவர்க்கு நல்ல பயிற்சி இருந்திருக்கவேண்டும் என்று ஊகிக்க இடம் இருக்கிறது அன்றோ? திருப்புகலூர்ப் பதிகத்தில், 'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை' என்னும் கருத்து, 'பாரி பாரி என்று பல ஏத்தி ஒருவன் புகழ்வர் செந்நாப் புலவர்' என்னும் புறநானூற்றுப் பாடலில் இவர் ஈடுபட்டிருந்த நிலைமையை உணர்த்தும். திருநெல்வாயில் திரு அறத்துறைப் பதிகத்தில் திருக்குறள் சொல்லையும் பொருளையும் வாரிப் பெய்துள்ளார். 'அகர முதலின் எழுத்தாகி' 'பொறிவாயில் இவ் ஐந்தினையும் அவிய' 'பிறவிக்கடல் நீந்தி' 'உறங்கி விழித்தால் ஒக்கும் இப் பிறவி' என்பன அப்பதிகத்தில் காணும் திருக்குறட் கருத்துக்கள். அக்கருத்துக்கள் 'அகர முதல எழுத்தெல்லாம்' 'பொறிவாயில் ஐந்தவித்தான்' 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' 'உறங்கி விழிப்பது போலும் பிறப்பு' என்னும் திருக்குறள் தொடர்களை ஒட்டியவை

அல்லவோ? திருக்கானாட்டுமுள்ளூர்ப் பதிகத்தில் 'இறையவனை மறையவனை எண்குணத்தினனை' என்னும் தொடரும் 'எண்குணத்தான் தாள்' என்னும் திருக்குறள் தொடரேயாகும்.

சரித்திரப் புலமையும் இவர்க்குண்டு என்பதைக் கோயில் பதிகத்தில் 'உரிமையால் பல்லவர்க்குத் திறை கொடா மன்னவரை மறுக்கம் செய்யும்' என்று அறிந்து கூறியதிலிருந்து அறியலாம். இத்தொடர் பல்லவர் ஆட்சி ஓங்கி இருந்த குறிப்பை விளக்குகின்றதன்றோ?

சோதிட நூல் புலமைக்குத் திருவொற்றியூர்ப் பதிகத்தில் 'மகத்தில் புக்கதோர் சனி' என்னும் தொடரே போதிய சான்றாகும். இத்தகைய கல்வியறிவு பெற்றிருந்தமையால்தான் இறைவனைக் குறிக்கும்போது, 'கற்ற கல்வியிலும் இனியான்' என்று பாடியுள்ளார். இறைவர் சுந்தரரைத் தோழமை கொண்டதற்கு இவர்பால் அமைந்த கல்வி அறிவே காரணமாகும் என்பதனைச் சிவப்பிரகாச சுவாமிகள்,

அறிந்து செல்வம் உடையானும்
அளகைப் பதியாற் றோழமைகொண்
டுறழ்ந்த கல்வி உடையானும்
ஒருவன் வேண்டும் எனஇருந்து
துறந்த முனிவர் தொழும்பரவை
துணைவா! நினைத்தோ ழமைகொண்டான்
சிறந்த அறிவு வடிவமாய்த்
திகழும் நுதற்கண் பெருமானே!

என்று பாராட்டியுள்ளார்.

மாற்றமேல் ஒன்றுரையீர் ! வாளாநீர் இருந்தீர் ;
வாழ்விப்ப னெனஆண்டீர் ; வழியடியேன் உமக்கு
ஆற்றவேல் திருவுடையீர் நல்கூர்ந்தீர் அல்லீர்
அணியாரூர் புகப்பெய்த அருநிதியம் அதனில்,
தோற்றமிகு முக்கூற்றில் ஒருகூறு வேண்டும்
தாரீரேல் ஒருபொழுதும் அடியெடுக்கல் ஒட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவி இருந்தீரே.

என்றும் திறம்படப் பாடினர்.

உவமைத்திறன் கூறும் இயல்பு இவர் பாட்டில் மிகுதியும் உண்டு. அவ்வுவமைகள் சிந்தைக்கினியன வாய்ச் செவிக்கினியனவாய்த் திகழவல்லவை. 'தினைத் தாள் அன்ன செங்கால் நாரை சேரும் திருவாரூர்'

'பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போல்நூல் கோமாற் கிடமாம்'

'சீதப் புனலுண்டு எரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே'
'அழல்நீர் ஒழுகி யனைய சடை'

என்றும் அவர் தம் பாடல்களில் அமைந்துள்ள உவமை களைச் சுவைத்து இன்புறுவோமாக.

திருப்பாட்டில் சொல் ஓவியத்தைத் திறனுறத் தீட்டியிருப்பதையும் சிந்தனைக்குக் கொணர்ந்து கழிபேர் இன்பம் துய்க்கவேண்டியவராய் இருக் கின்றோம்.

'அரும்பருகே சுரும்பருவ அறுபதம்பண் பாட
அணிமயில்கள் நடமாடும் அணிபொழில்சூழ் அயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளரும் கழனிக்
கமலங்கள் முகமலரும் கலயநல்லூர் காணே'

இன்னோரன்ன கல்வி யறிவுடையார் பாடிய பாட்டுத் திறனுடைய பாட்டாகவும் நயனுடைய பாட்டாகவும் துலங்கவல்லது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? மற்றொரு புலவர் நயத்துக்குச் சுந்தரனார்' என்று இவர் பாடலின் நுட்பத்தை அறிந்து ஓதியுள்ளார்.

இனிச் சுந்தரர் பாட்டின் திறனைச் சிறிது உணர்வோமாக. சுந்தரரும் இறையவரும் ஒருவரை ஒருவர் தோழமைகொண்டு பழகியவர் ஆதலால், சுந்தரர்க்கு இறைவர்பால் எதையும் வேண்டும் திறன் அமைந்திருந்தது. திருநாகைக்காரோணப் பதிகத்தில் தமக்கு இன்னின்ன வேண்டுமெனப் பட்டியல் தயாரித்துக் கேட்போர்போல் கேட்குந் திறன், இவர் திருப்பாட்டின் திறன்களில் ஒன்றாகும்.

இக்கால நாகரிகமுறைக்கிணங்கக் குதிரை ஊர்தி வேண்டியதை,

'காற்றனைய கடும்பரிமா ஏறுவதும் வேண்டும்'

என்றும்,

'கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும்'

என்றும்,

பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்

என்றும் கேட்ட அடிகளைப் படிக்கையில் நாம் வியப்பெய்தாமல் இருக்கமுடியாது. இத்துணையும் வேண்டுதற்குத் தமக்கு உரிமை உண்டு என்பதைக் குறிப்பார் போல,

இவ்வரிகளில் ஒரு நாடக அரங்கையன்றே சித்தரித்து உள்ளார் ஆளுடைய நம்பிகள். சோலையை நாடக அரங்காக்கினர்; சுரும்பை இசை கூட்டும் சுருதியாக்கினர்; வண்டைப் பாடகராக அமைத்தார்; மயில்களை நடன மாதராகச் செய்தார்; தாமரை மலர்களையும் குவளை மலர்களையும் ஆடல் பாடல்களைக் கண்டு துய்க்கும் மக்கள்போல எண்ணித் தாமரையை முகமாகவும், குவளையைக் கண்ணாகவும் பாடினர். இவ்வரிகளில் அமைந்த ஓவியத்தை உன்னி உன்னிச் சுவைப்போமாக.

சமய சந்தர்ப்பங்களுக்கு ஏற்பச் சமத்காரமாகப் பாடுந்திறனும் இவர் திருப்பாட்டின் திறத்தில் ஒருபகுதியாகும். குண்டையூர்க்கிழார் ஈந்த நெற்குவியலைத் தம் இல்லம் சேர்க்க ஆட்களை வேண்டியபோது, 'எனக்கு ஒரு மாதுடன் வாழ்வதே பெருந் துன்பமாக இருக்க, நீர் இருமாதருடன் பெருந் துன்பத்தைத் துய்க்கும் நிலையில் இருப்பீர். ஆகவே, யாதொரு தடையும் இன்றி ஆட்களை அனுப்புக' என்பார்போலத் திருக்கோளிலி பதிகத்தில்,

> பாதியோர் பெண்ணைவைத்தாய்
> படரும்சடை கங்கைவைத்தாய்
> மாதர்நல் லார்வருத்தம்
> அதுநீயும் அறிதியன்றே.

என்றனர். நயத்துக்குச் சுந்தரனர் என்பதற்கு ஒரு சான்றைக் காண்போமாக.

திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்தபோது அவ்வெல்லையைவிட்டுப் பிரிவதில்லை எனச் சத்தியம்

செய்தவர், திருவாரூர் நினைவு வந்தபோது அச்சத்தியம் மீறிப் புறப்பட இறைவர் அவர் திருக்கண் பார்வையை மறையச்செய்தார். அதனால், கோபங்கொண்டு ஒற்றி யீசனை 'மகத்தில் புக்கதோர் சனி எனக் காணாய்' என்று வைது, உடனே 'மைந்தனே மணியே மணவாளா' என்று புகழ்ந்து 'நான் முகத்தில் கண் இழந்து எங்ஙனம் வாழ் வேன். நீ மூன்று கண்ணோடு இருக்கின்றனையே; உன் அடியவன் இருகண்களை இழந்து வாடுதல் முறையோ? மேலும், வீட்டில் இளம் பெண்டிர்க்கு வேலையிட்டால் குருடா கூப்பிடாதே என்று கூறினால் நான் என்செய் வேன்' என்னும் கருத்தெல்லாம் அடங்க,

'மகத்திற் புக்கதோர் சனியெனக் காணாய் ;
  மைந்த னே!மணி யே!மண வாளா !
அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்
  'அழையேல் போகுருடா'யெனத் தரியேன்
முகத்தில் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன் ?
  முக்க ணா!முறை யோ?மறை யோதீ !
உகைக்கும் தண்கடல் ஓதம்வந் துலவும்
  ஒற்றி யூரெனும் ஊருறை வானே'

என்று உள்ளங்கசிந்து பாடினார். நயத்துக்குச் சுந்தர னார் என்பதற்கு இதனினும் வேறு சான்றுகள் வேண்டுமோ ?

இறைவனை ஏசல் முறையில் தோழமை உரிமையில் சுந்தரர் பாடுந் திறனையும் இனிக் காட்டுவோமாக.

சுந்தரர், சேரர்பெருமான் தந்த செல்வங்களைப் பெற்று வருகையில் திருமுருகன் பூண்டி இறைவர், பூதகணங்களை வேடர் வடிவில் ஏவிப் பொருள்களைக்

கவர்ந்துவரப் பணித்தார். அவைகளும் அவ்வாறே செய்தன. அப்பொழுது சுந்தரர், 'நீர் இவ்வூரில் ஏன் குடியாக இருக்கின்றீர்? ஆறலை கள்வர் மிகுதியும் உளரே. நீர் என்ன கால் அற்ற முடவரோ? அன்றி, உடல் நலம் குன்றிய நோயாளியோ? அல்லரே! உம் ஊர்தியாகிய இடபத்தின்மீதேனும் ஏறிப்போவீர்' என்று பாடிய வரிகளே,

'முடவ ரல்லீர் இடரி லீர்முரு
    கன்பூண்டி மாநகர்வாய்
இடவ மேறியும்போவ தாகில்நீர்
    எத்துக்கிங் கிருந்தீர் எம்பிரானீரே'

என்பன.

இதுபோலவே திருவொற்றியூரில் இழந்த கண் பார்வையில், ஒன்றைத் திருவேகம்பத்தில் பெற்றபின் திருவாரூருக்குச் சென்று மற்றொரு கண்ணின் பார்வையையும் வேண்டும்போது ஏசல் முறையில்,

'விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன்
    விரும்பி ஆட்பட்டேன்
குற்றம் ஒன்றும் செய்த தில்லை
    கொத்தை ஆக்கினீர்
ஏற்றுக் கடிகேள்? என்கண் கொண்டீர்;
    நீரே பழிபட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால்
    வாழ்ந்து போதீரே!'

என்று பாடினர். இதில், நான் விரும்பி ஆட்பட்டேன். நான் குற்றம் ஒன்றும் செய்யவில்லை. அப்படி இருந்தும் என் கண்ணைக் கொத்தையாக்கினீர். அதனால் உமக்குத்

தான் பழியே அன்றி, எனக்கு ஒன்றும் இல்லை. இனி யாகிலும் நீர் சுகமாக மனைவி மக்களோடு வாழ்க என்று வாழ்த்துவதுபோல ஏசுகின்றார் அல்லரோ ?

சுந்தரர் திருப்பாட்டில் உபதேசத்திறன் பலபட விரிந்து காணப்படுகிறது. மக்கட்கு எந்தெந்த முறை யில் அறிவுறுத்த வேண்டுமோ அவ்வம்முறையில் அறி வுறுத்திச் சென்றுள்ளார். அரசர்களுக்கும் அறவுரை மொழிந்துள்ளார். பொதுமக்கட்கும் பொன்னுரைபுகன் றுள்ளார். அவ்வறவுரையையும் பொன்னுரையையும் மக்கள் யாவரும் உணர்ந்து தம் எண்ணத்தை இறையடி யில் செலுத்துதற்கு ஏதுவாகும்.

'மத்த யானை ஏறி மன்னர் சூழவரு வீர்காள் !
செத்த போதில் ஆரும் இல்லை
சிந்தையுள் வைம் மின்கள் !'

என்பது அரசருக்குப் புகன்ற அறிவுரை.

'தோற்றம் உண்டேல் மரணம் உண்டு
துயரமனை வாழ்க்கை'
'இன்பம் உண்டேல் துன்பம் உண்டு
ஏழைமனை வாழ்க்கை'

'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்'

'ஓடுபுனல் கரையாம் இளமை'

என்பன மக்களுக்கு நல்லறிவுகொளுத்த எழுந்த பொன் னுரைகள்.

இறைவனை நோக்கி இரக்கத்தோடு பாடிய திறனை யும் பார்மினோ ! பார்மின் !

'கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதான் அயலே இருந்தால் குற்றமாமோ?
கொடியேன் கண்கள் கண்டன கோடிக்குழகீர்
அடிகேள்! உமக்கார் துணையாக இருந்தீரே!'

இப்பாட்டில் 'வேதாரண்யக் கோடிக்கரையில் உள்ள இறைவரே, இக்கடல் ஓரத்தில் யாரும் துணையின்றி இருக்கின்றீரே! கடல் காற்றும் வீசி உம்மைத் தொந்தரவுபடுத்துகிறதே, இதனை நீத்து ஊருக்குள் வந்து குடிபுகக்கூடாதோ?' என்று வினவும் வினா எத்துணை இரக்கமாக இருக்கிறது பாருங்கள்!

சீபர்ப்பத மலையை வர்ணிக்கையில் வன்தொண்டர் வேடர்கள் இரக்கங்கொண்டு யானைகளுக்குத் தேனைப் பிழிந்து இனிது ஊட்டினர் என்னும் செயலை அழகு படப் பாடியிருப்பதும் இரக்கச்சுவைக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

'ஆனைக்குலம் இரிந்தோடித்தன் பிடிசூழலில் திரியத்
தானப்பிடி செவிதாழ்த்திட அதற்குமிக இரங்கி
மானக்குற அடல்வேடர்கள் இலையால்கலை கோலித்
தேனைப்பிழிந் தினிதூட்டிடுஞ் சீபர்ப்பத மலையே!'

என்னும் பாடலைச் சுவைத்து இன்புறுக. கொல்லுதலையே குணமாகக் கொண்டொழுகும் பொல்லாத சிலைவேடப் புளிஞர் இடத்தும் இரக்கத்தை இணைத்துப் பாடிய திறனை என்னென்று வியப்பது?

இனி நகைச்சுவைத் திறனை எங்ஙனம் எடுத்து இயம்பியுள்ளார் என்பதையும் சிறிது காண்போமாக.

எந்த இலக்கியத்திலும் நகைச்சுவையைப் பெய்து எழுதப்பெறுதிருப்பின், அது சிறந்த நூலாகப்

போற்றப்படுவதில்லை. ஆகவே, புலவர் பெருமக்கள் தம் நூலில் யாண்டேனும் அதனைப் புகுத்தியே செல்வர். சில இடங்களில் அந்நகைச்சுவைப் பாடல்கள் தம் சுவையை வெளிப்படையாக வெளிப்படுத்தி நிற்கும்; சிற்சில இடங்களில் இலைமறை காய்போல் மறைந்து காணப்படும், இம்மறைவைத் துருவிக் காணுது பொறுமையை இழந்தவர்கள் தமிழ் நூல்களில் நகைச்சுவையே இல்லை என்றே கூற முற்பட்டு விடுகின்றனர்.

சுந்தரரது திருப்பாட்டின் திறத்தில் நகைச்சுவைக்குரிய பாடல்களில் ஒன்று,

'திங்கள் தங்கு சடைகண் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்தி றவாள்
கணப தியேல் வயிறுதாரி
அங்கை வேலோன் குமரன்பிள்ளை
தேவி யார்கோல் தட்டி யானார்
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளியு ளீரே !'

என்பது. இப்பாடல் இறைவரது குடும்பத்தையே எள்ளி நகையாடுவதுபோலன்றோ இருக்கிறது? இன்னோரன்ன சுவைத்திறன் அமைந்த பாடல்கள் பல சுந்தரர் பாட்டில் அமைந்து இருக்கின்றன. அவற்றைப் படித்து இன்புறுவீர்களாக.

# 7. தூது

வள்ளுவர் வகுத்துக்கூறும் அதிகாரங்களில் தூதும் ஒன்று. இப்பகுதியில் தூதுரைப்பவர்களின் இயல்புகள் அனைத்தும் இனிதின் இயம்பப்பட்டுள்ளன. தூதர் பண்பு இன்னது என்பதை முன்னர் அறிந்த பின்பு, இப்பண்பமைந்த தூதர், தூது இயம்பிய முறைகளை உணர்தல் எளிதாக இருக்கும் என்னும் எண்ணம் கொண்டே, தூதர் பண்பு முன்னர் விளக்கமாக எழுதப் படுவதாயிற்று

தூது உரைப்பவர்களில் இருவகையினர் உளர். ஒரு வகையினர் தம்மைத் தூது சென்று வருமாறு அனுப்பியவர் கூறியவற்றைக் கூறி வருபவர்களும், தாமாகவே சமயத்துக்கேற்பத் தம் கருத்தை வகுத்துக் கூறுபவரும் ஆக இருவகையினர் ஆவர். இனி, இவர்கள் பண்பைச் சற்றுப் பார்ப்போமாக. தூதுரைப்பவர் தம் சுற்றத்தவரிடத்து அதாவது தம்மைச் சார்ந்தவரிடத்து அன்புடையராயும், நற்குடி பிறப்பினராயும் இருத்தல் வேண்டும். தமக்குமுன் தம் மரபில் தூது சென்றவர் எவரேனும் இருப்பின், அவர்களின் இயல்பையும் கேட்டு அறிந்துகொள்ளுதல் வேண்டும். தூது உரைப்பதில் தம் சுற்றத்தவர்க்கு யாதொரு தீதும் வராமல் காத்துக் கொள்ளவேண்டும். இவர்களது பேச்சு வன்மையால் எதிரிகளும் தம் வயத்தராதல் வேண்டும்.

இதனைத் தெள்ளத் தெளியப் பாரத வெண்பா,

'அன்புடைமை ஆய்ந்த அறிவுடைமை இல்பிறப்பு
நன்குடைமை நல்ல நயனுடைமை—நன்கமைந்த
சுற்றம் உடைமை வடிவுடைமை சொல்வன்மை
ஈற்றடங்கல் தூதின் கடன்'

என்று கூறுவதையும் காண்க. அன்பும் அறிவும் ஆராய்ந்த சொல்வன்மையும் ஆகிய இம் முப்பண்புகளும் மிகமிக இன்றியமையாதவை. ஆராய்ந்த சொல் வன்மை என்றதனால் தூதுவர் நல்ல கல்விப்பயிற்சிபெற்றவராய் இருத்தல் வேண்டும் என்பது பெறப்படுகிறது அன்றோ? தூதுவர் எல்லா நூல்களையும் கற்று வல்லார்முன் அந்நூல்களைத் தாமும் கற்று வல்லவராய்த் திகழ்தல் இன்றியமையாதது. நூலை நன்கு ஓதியவர்களைக் காட்டிலும், அந்நூல்களை ஓதி உணர்ந்தவர் முன்னர் நூலின் திறனை வகுத்துக் கூறும் ஆற்றல் தூதுவர்க்குப் பெரிதும் வேண்டற்பாலதாகும்.

செய்திகளைப் பிறர்மாட்டுக் கூறுங்காலத்துத் தொகுத்துச் சொல்லவேண்டியவற்றைத் தொகுத்துச் சொல்லவேண்டும். அதனைச் சொல்லுங்காலத்து, இனிய சொற்களால் எதிரி மனம் மகிழும்படியும் சொல்ல வேண்டும். இதனால் சுருங்கச் சொல்லவேண்டும் என்பதும், விரும்பாத சொற்களை நீக்கவேண்டும் என்பதும், மகிழுமாறு பேசவேண்டும் என்பதும் விளங்குகின்றன அல்லவா?

தூதராகச் சென்றவர், தம்மைத் தூது போக்கியவர் கூறியவற்றை எதிரியிடத்தில் கூறும்போது, அவ்வெதிரி கோபங்கொண்டு தம்மைக் கொல்வான்போன்று சீற்றக் குறியுடன் பார்க்கவும் நேரிடும். அந்தக்காலத்திலும் சிறிதும் அஞ்சுதல் கூடாது. காலத்தை அறிந்து

காரியம் முடிதற்கான முறையில் பேசி நடந்துகொள்ளல்வேண்டும். இவற்றோடு தம் முறைமையையும் காலத்தையும் இடத்தையும் அறிதல் தூதுவர்க்குத் தலைசிறந்த பண்பாகும். தம்மவர் நிலையினையும், எதிரிகளின் நிலையினையும் அறிந்து அவற்றிற்கு ஏற்பச் செயல் முறைகளைச் செய்தல் வேண்டும்.

தூதுவர்க்கு உள்ளத்தூய்மை வேண்டற்பாலது. பொருள் வெஃகலும் இன்பம் விழைதலும் கூடா. துணிவுடைமை வேண்டப்படுவது. துணிவுடைமையாவது திடபுத்தியாம். அதாவது, தம்மை அனுப்பி, 'இன்னவை கூறி வா' என்று கூறி விடுத்தபோது, தமக்கு ஏதேனும் தீங்கு வருமே என்று கருதி அஞ்சித் தம் தலைவர்க்குத் தாழ்வு வரும் வார்த்தைகளை வாய் சோர்ந்தும் சொல்லாத பண்பாடு, தூதுவர்க்கு இன்றியமையாததாகும். மறந்தும் வடுச்சொற்களை வழங்குதல் கூடாது.

தடுமாற்றம் இன்றித் தகைசான்ற சொல்லால்
வடுமாற்றம் வாய்சோரான் ஆகி—விடுமாற்றம்
எஞ்சாது கூறி இகல்வேந்தன் சீறுங்கால்
அஞ்சாது அமைவது தூது'

என்று பாரத வெண்பா வற்புறுத்துவதைக் காண்க.

மேலும், இவர்கள் பண்பை ஏலாதி,

'மாண்டமைந்தார் ஆய்ந்த மதிவனப்பே வன்கண்மை
ஆண்டமைந்த கல்வியே சொல்ஆற்றல்—பூண்டமைந்த
காலம் அறிதல் கருதுங்கால் தூதவர்க்கு
ஞாலம் அறிந்த புகழ்'

என்று கூறுகிறது.

இன்னோரன்ன இயல்பு படைத்தவரே தூது செல்லுதற்கு உரியவர். இவ்வியல்பினைப்பெற்ற பலருள் அங்கதனும் ஒருவன். அவன் சென்று தூது உரைத்ததை இனிக் காண்போமாக.

## அங்கதன் தூது

இராமாயணத்தில் குறிப்பிடத்தக்கவர் ஒரு சிலர் உண்டு. அவர்களுள் ஒருவன் வாலி. இவனே சுக்கிரீவன் தமையன்; இராமனால் கொல்லப்பட்டவன். இவனது மைந்தன் அங்கதன். அவனும் தனது பணியினை இராமனுக்குச் செய்துள்ளான். அப்பணியாவது இராமன்பொருட்டு இராவணன்பால் தூது சென்று மீண்டதாகும். தூதராகச் செல்பவர், தூதுரைக்கும் பண்பும், ஆற்றலும் பொருந்தப்பெற்றிருக்கவேண்டும் என்று முன்பு கூறினோம். இப்பண்பும் ஆற்றலும் இவ்வங்கதன்பால் உண்டு. இதனை உணர்ந்த இராமன். அவனையே இராவணனிடம் தூதுஅனுப்ப முடிவுசெய்தனன். தன் முடிவினைத் தானே முடிவு கட்டி விடாமல் தன்னை அடைக்கலம் புகுந்த விபீடணனுடன் கலந்து ஆய்ந்த பின்பே, அங்கதனைத் தூது போக்க விழைந்தனன். ஆகவே, வீடணனை நோக்கி, 'விபீடணா! இராவணனிடம் தூதன் ஒருவனை அனுப்பிச் சீதையினைவிடுகின்றனையா? இல்லையா ?,என்பதைக் கேட்டறிவோம். இதற்கேற்ப அவன் சீதையை விட மறுத்தால் பின்பு அவனோடு போரிட்டுச் சீதையை மீட்போம். இதுதான் அறனும் நீதியும் ஆகும் என்பது எனக்குத் தோன்றுகிறது என்றனன்.

இராமன் இவ்வாறு முடிவுசெய்து வாலியின் மகனுன அங்கதனையே தூது விடுதல் தக்கது என்றும், பகைவர் தம் வீரத்தால் எது செய்யினும் அதனை எதிர்த்து யாதொரு தீங்கும் இன்றித் திருப்பவல்ல ஆற்றல் அவனுக்கே உண்டு என்றும் கூறி வாலியின் சேயை அழைத்து, 'நீ இராவணன்பால் சென்று 'சீதையைச் சிறைவீடு செய்கின்றனையா? அன்றிப் போருக்கு வருகின்றனையா? இந்த இரண்டில் எதைச் செய்ய இருக்கின்முய்?' என்று கூறி, 'ஒரு முடிவு பெற்று வருக' என்று ஏவினன். தான் தூதாகச் செல்லவேண்டிய பொறுப்பு ஏற்பட்டதே என்று உள்ளக் களிப்பினுல் அங்கதன் உடல் பூரித்தனன். அவன் தோள்கள் குன்றினும் பொலிவுற்றுத் தோன்றின.

அங்கதன் இராமன் திருவடிகளை நிலனுறப் பொருந்தி வணங்கினுன். 'மாருதிக்கு அடுத்தபடி நம்மைத்தான் எண்ணியுள்ளார் போலும்! எனக்கு நிகர் யாவர் உளர்?' என்று எண்ணி மகிழ்வுற்றுன். அம்மகிழ்வு காரணமாகச் சிங்கம் ஒன்று ஆகாயவழியே செல்வதுபோலவும், இராமன் தன் வில்லில் தொடுத்து விட்ட அம்பு வேகமாகப் போவதுபோல்வும் வான் வழியே சென்முன்.

அங்கதன், கடுமையான கனலும் விடமும் இயமனது கொடுமையும் ஒன்று சேர்ந்து, கைகள் பெற்று, ஒளியுடைய முடி புனைந்து கருங்கடல் உருக்கொண்டு வீற்றிருந்தால் போல வீற்றிருந்த இராவணன் அவையினை நெருங்கினுன்.

தன் எதிரே சிறிதும் அஞ்சாது வந்து நிற்கும் அங்கதனைக் கண்ட தசக்கிரீவன் கண்களில் தீப்பொறி பறக்கக் கோபக்குறியுடன் 'நீ யாவன்? இங்கு நீ வந்த காரணம் யாது? இங்குள்ளவர் உன்னைக் கொன்று புசிப்பதற்கு முன்பு நீ வந்த காரணத்தை விரைவில் கூறுக' என்று உரப்பிக் கேட்டனன்.

இந்த வெஞ்சின மொழிகளைக் கேட்டு வாலி மைந்தன் சிறிதும் வெருக்கொண்டிலன். விலாப் புடைக்க நகைத்திட்டான் என்றாலும், நகைத்த அளவில் நிற்காமல் தன்னை வினைய, வினைக்களுக்கு விடை கூறவேண்டுமென்ற கருத்தினனாய், 'இராவணா! என்னை யாவன் என்று வினவுகின்றாய்? யான் சீதை நாயகனான இராமன் விட்ட தூதன். அவன் கூறி அனுப்பிய மொழியினை உனக்குக் கூறவே ஈண்டு வந்தனன். அவனைச் சாதாரணமானவன் என்று கருதிவிடாதே; அவன் பூத நாயகன்; புவிக்கு நாயகன்; தெய்வ நாயகன்; நீ கூறும் வேத நாயகன்; விதிக்கும் நாயகன்' என்று இராகவனுடைய பெருமையினைப் பேசினன். இப்படி அங்கதன் அடுக்கி அறைந்திட்ட மொழிகளைக் கூறக் கேட்ட இராவணன் நகைத்து, 'குரங்குகளைக் கூட்டிக் கொண்டு சேது கட்டி உன்னை இங்கனுப்பிய நரனையா நீ உலகநாதன் என்று கூறினை? நன்று; நன்று உன் மாற்றங்கள்! எனது திருமுன் மும்மூர்த்திகளும் வர அஞ்சுவர். அவ்வாறு இருக்க, நீ ஒரு மனிதன்பொருட்டு அஞ்சாது என் முன் வந்துற்றனை. ஆக நீ யாவன்? உன் வரலாற்றைக் கூறுக?' என்று அதட்டிக் கேட்டனன். அங்கதன் ஒரு குறும்புக்காரன். இராவணன் கொட்டம் அடங்க எப்படித் தன்னைப்பற்றிக் கூறினால் நன்கு

அமையும் என்று சிந்தித்து நேரே தான் வாலியின் மகன் அங்கதன் என்று கூறுமல், 'இராவணன் என்பவனைத் தன் வாலில் கட்டி மலைகள் பல தாவிச் சென்றவனும், தேவர்கள் அமுதம் உண்ணத் திருப்பாற்கடலைக் கடையப் பெருந்துணையாய் இருந்தவனும் ஆகிய வாலி என்பானுடைய மகன் யான்' என்பதை,

'இந்திரன் செம்மல் பண்டோர்
 இராவணன் என்பான் தன்னைச்
சுந்தரத் தோள்க ளோடும்
 வாலிடைத் தூங்கச் சுற்றிச்
சிந்துரக் கிரிகள் தாவித்
 திரிந்தனன் தேவர் உண்ண
மந்தரக் கிரிபால் வேலை
 கலக்கினான் மைந்தன்' என்றான்.

இப்படி அங்கதன் சொல்லக்கேட்ட இராவணன் கோபம் தணிந்தவனாய், 'ஆ! அப்படியா? உன் தந்தையான வாலி எனது நெருங்கிய நண்பனாவான். உனக்கு யான் வானரத் தலைமையினைத் தாழாது தருகின்றேன். நீ இங்கு வந்தமை குறித்து உளம் மகிழ்கின்றேன். உன் வரவு நல்வரவு ஆகுக. நல்ல காரியம் செய்தனை! என் நண்பன் மகனாதலின் நீ எற்கும் மகன் என்னும் உரிமையை யான் ஏற்கின்றேன். ஆனால், என் நண்பனும் உன் தந்தையுமான வாலியைக்கொன்ற ஒரு நரனுக்காக நீ தூது வந்ததுதான் பேதைமையாகும். என்றாலும், என்னை அடைந்துவிட்டனை. இராமனிடம் கைகூப்பி வாய் பொத்தி வாழும் வாழ்வினை அகன்று இங்கு வந்து சேர்ந்துவிட்டனை! சீதையைப் பெற்றேன்; உன்னையும் மகனாகப் பெற்றேன். இதனினும் எற்கு என்ன சீரிய வாழ்வு உளது? அந்த நரர்களாகிய இராம இலக்கு

மணர் இன்றே நாளையோ அழிவது திண்ணம். இதில் ஐயம் இல்லை. உறுதியேயாகும். வாலியின் அரசை உனக்கே தருவன். பல்லூழிக் காலம் அரசு செய்வா யாக. யானே உனக்கு முடிசூட்டு விழா செய்ய நீ அரி யாசனத்தில் அமர்ந்து தேவரும் மற்று யாவரும் போற்ற அரசு செய்க !' என்று நட்பு முறையும், உறவு முறையும் அன்புடைமையும் உள்ளவன்போல இவ் வார்த்தைகளை அறைந்திட்டான்.

இவ்வாறு உறவும் நட்பும் கொண்ட உளத்தோடு இராவணன் உரைப்பக் கேட்ட அங்கதன், கையோடு கைதட்டித் தோளும் மார்பும் குலுங்கச் சிரித்து, இராவணா! இராம இலக்குவனுர்கட்கா அழிவு ஏற் படப்போகிறது? இலங்கையில் இருப்பவர்கட்கு அழிவு ஏற்படப்போகிறதே என்ற காரணத்தால் அன்றே உன் தம்பியாகிய விபீடணன் எங்கள் தலைவ னும் இராமனைச் சரண் புகுந்தனன். உன் பேச்சு வன்மையால் என்னையும் உன் வசப்படுத்தப் பார்க் கின்றனைபோலும்! தூதுவராக வந்தவர் தூதர் கடமை யினை ஆற்ருது அரசை ஏற்பது அறன் ஆகுமா? அதுவும் நீ கொடுக்க யானு அரசு பெறுவேன்? நீ தர யான் பெறுவது, நாய் கொடுக்கும் அரசைச் சிங்கம் பெறுவது பான்றதாகும்' என்று கூறிச் சிரித்தான்.

இக்கருத்துக்கள் அடங்கக் கம்பர் பாடிய பாடல்களே,

அங்கதன் அதனைக் கேளா
அங்கையோ டங்கை தாக்கித்
துங்கவன் தோளும் மார்பும்
இலங்கையும் துளங்க நக்கான்

இங்குநின் றூர்கட் கெல்லாம்
　　இறுதியே என்ப துன்னி
நுங்கள்பால் நின்றும் எம்பால்
　　போந்தனன் உம்பி யென்றான்.

வாய்தரத் தக்க சொல்லி
　　என்னைஉன் வசம்செய் வாயேல்
ஆய்தரத் தக்க தன்றோ?
　　தூதுவந் தரச தாள்கை
நீதரக் கொள்வேன் யானே
　　இதற்கினி நிகர்வே றெண்ணில்
நாய்தரக் கொள்ளும் சீயம்
　　நல்அர செனறு நக்கான்

என்பன.

அங்கதன் தன்னைச் சிறிதும் மதியாது கூறிய மொழிகளைக்கேட்டு, இராவணன் அடங்காச் சினமுற்ற வனாய், 'சரி, நீ வந்த காரியம் என்ன?' என்று கேட்டனன். அப்போது அங்கதன், 'இலங்கை வேந்த! என்னைக் கருணைவள்ளல் அழைத்து, உன்பால் சென்று வருமாறு பணித்துத் 'தேவியை விடுக; அன்றிப் போருக்கு வருக' என்பதை அறிவிக்கக் கூறினன். இரண்டில் எதைச் செய்ய விருப்பம் உளது? உள்ளக்கிடக்கையை ஒளியாது நன்கு சிந்தித்து உரைக்க. மேலும், உன்பால் வைத்த இரக்கம் காரணமாக உனக்கு ஒன்று அறைவல் கேட்டி. உனக்கு நன்மையாவது சீதையைச் சிறைவீடு செய்து இராமனை வணங்கி உன் சுற்றத்துடன் நல்வாழ்வு நடத்துவதேயாகும். இவ்வாறு செய்யாது போர் புரிய துணிந்தாயாயின், போருக்குப் புறப்படுக' என்றனன். இந்தவாறு இழிசொற்களைக் கூறக்கேட்ட இராவணன்

சீற்றங்கொண்டு, 'இவனைப் பிடியுங்கள்; கட்டுங்கள்' என்று நால்வரை ஏவினான். இராவணன் கட்டளை ஏற்றவர் அங்கதனைப் பிடித்துக்கொண்டனர். பிடித்த வர்களை அங்கதன் பற்றிக் கோபுரவாயிலில் எறிந்தனன். பின்பு அங்கதன் வானவழியே தாவிச் சென்று கீழ் இறங்கி இராமன் திருவடிகளை வணங்கினான். அங்கதன் வணங்கக்கண்ட இராமன் சென்றுவந்த செய்தியினைக் கூறுமாறு பணித்தனன். அங்கதனும் சென்ற செய்தி யினைப் பாரித்து உரைக்காமல் சுருக்கமாகக் கூறத் தொடங்கியவன்,

"உற்ற போதுஅவன் உள்ளக் கருத்தெலாம்
கொற்ற வீரன் உணர்த்தென்று கூறலும்,
முற்ற ஓதியென் மூர்க்கன் முடித்தலை
அற்ற போதன்றி ஆசைஅறான்' என்றான்"

இவ்வாறு அங்கதன் கூறக்கேட்ட இரகுகுல திலகன் வேறு வழியின்றி, இராவணனுடன் போரிடத் தீர்மானித்தனன்.

# 8. உமறுப்புலவர் உணர்த்திய பாலை

முஸ்லீம் புலவர்களுள் தலைசிறந்தவர் உமறுப் புலவர். இவரது பெருமையினைத் தமிழ்நாடு இவர் யாத்துள்ள சீறாப் புராணத்தின் மூலம் நன்கு அறியும். இவர் புலவர் பெருமக்களால் நன்கு பாராட்டப்பட்டவர். இவரைக் காயற்பட்டினம் பீர்முகம்மது அவர்களின் குமாரர் மகுதூமுகம்மதுப் புலவர் தாம் யாத்த கீர்த்தனு ரஞ்சிதம் என்னும் நூலில்,

செந்தமி ழாலே சீரு சிறப்புடன் பனுவல் செய்தே
உந்திய புகழ்பெற் றோங்கும் உமறெனும் புலவோர்

என்று வாயாரப் புகழ்கின்றார். சீதக்காதிமீது பாடப் பட்ட நொண்டி நாடகத்தில் உமறுப்புலவர்,

சந்த முத்தமிழ் தேறும்—கல்வித்
தலைவர் மகிழ் உமறுப் புலவர்

என்று பாராட்டப்படுகிறார்!

இத்தகைய சீரும் சிறப்பும் பேரும் புகழும் வாய்ந்த புலவராம் உமறு அவர்கள் பாலை நிலத்தினை எங்ஙனம் பாங்குற உணர்த்தி உள்ளனர் என்பதை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும். அவ்வாராய்ச்சிக்கு முன்பு பாலைநிலத்தின் பொதுப்பண்புகளைப்பற்றி நம் இலக்கண இலக்கியங்கள் என்ன கூறுகின்றன என்பதைப் பார்ப்போமாக.

உலகம் நான்கு பிரிவுக்குள் அடங்கும் என்பது நமது தமிழ் இலக்கண மரபு. அவை காடும் காட்டைச் சார்ந்த இடமாகிய முல்லையும், மலையும் மலையைச் சார்ந்த இடமாகிய குறிஞ்சியும், வயலும் வயலைச் சார்ந்த இடமாகிய மருதமும், கடலும் கடலைச் சார்ந்த இடமாகிய நெய்தலும் ஆகும். இந்த உண்மையினை நமது ஒல்காப் பெருமை வாய்ந்த தொல்காப்பியம்,

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே'

என்று கூறி உறுதிப்படுத்துகிறது. இந்நூற்பாவின் மூலம் பாலை என்னும் ஒரு நிலம் குறிப்பிடாமையினை நாம் அறிகிறோம்.

ஆனால், பின் வந்த தமிழ் இலக்கணங்களும் இலக்கியங்களும் பாலை என்னும் நிலம் உண்டு என்பதை வெளிப்படையாக ஒப்புக்கொண்டே பேசுகிறது. தொல்காப்பியமோ பாலை நிலத்தை நடுவணது என்னும் சொல்லால் குறிப்பிடுகின்றது. தொல்காப்பியர் பாலையை நடுவணது என்று ஏன் குறியீடு தந்து மொழிந்தனர் என்பதற்கு விளக்கம் கூறவந்த உச்சி மேல் புலவர்கொள் நச்சினார்க்கினியர்,

"அப் பாலை ஏனைய போல ஒருபால் படாது நால் வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கம் செய்து வருதல் பற்றிப் பாலைக்கு நடுவணதென்னும்

பெயர் ஆட்சியும் குணனும் காரணமாகப் பெற்ற பெயர்'' என்று விளக்கம் தந்தனர்.

ஈண்டு ஓர் ஆசங்கை எழக்கூடும். அதாவது, முல்லை குறிஞ்சிபோல இந்நிலத்திற்கும் ஓர் அடிப்படை நிலம் வேண்டாவா என்பது. பாலைக்கும் அடிப்படை நிலம் உண்டு. இதனை நமது நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்,

'முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல்பு அழிந்து நடுங்குதுயர் உழக்கும்
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்'

என்று பாலை நிலம் தோன்றற்குரிய காரணத்தை அறிவிக்கிறது. இதனால் குறிஞ்சி நிலம், முல்லை நிலம் தம் வளத்தில் குறைந்தபோது அவை பாலையாக மாறுகின்றன என்பதைப் பெற்றும். வளம் மாறுதற்குரிய காரணத்தையும் சிலப்பதிகாரம்,

'வேனில் கிழவனோடு வெங்கதிர் வேந்தன்
தானலம் திருகத் தன்மையின் குன்றி'

என்று கூறுகிறது. அதாவது குறிஞ்சியும் முல்லையும் நலிதற்குக் காரணம் முதுவேனில் பருவமும் சூரியனும் தாம் என்பது. கற்றோர் ஏத்தும் கலி, குறிஞ்சி தன்னிலையில் மாறிப் பாலையாக மாறியது என்ற குறிப்பை 'விலங்குமலை வெம்பிய போக்கரும் வெஞ்சுரம்' என்றும், முல்லை தன்னிலைதிரிந்து பாலையான நிலையினை, 'வேனில் உழந்த வறிதுயங்கு ஓய்களிறு, வான் நீங்கு வைப்பின் வழங்காத்தேர் நீர்க்கவாஅம், கானம்' என்றும் கூறுகிறது.

இக்காலத்தில் பாலை என்பதை Desert என்று கூறி, அது மணலும் மணற்சார்ந்த இடமும் என்று கருதுவர். அங்ஙனம் கருதுதற்கு இடன் இல்லை. இது வெறும் மணல் வெளியன்று. இந்நிலத்துக்குத் தெய்வம் உண்டு. இங்குத் தலைவன் தலைவியர் உளர். இவர்கட்கு அடங்கிய குடிமக்கள் உண்டு; விலங்கு பறவைகளும் உள; மரங்களும், இசையும் இசைக் கருவிகளும் உண்டு; இங்கு வாழ்பவர்கட்குத் தொழிலும் இருக்கிறது; ஏன், நீர் நிலையும் உண்டு. ஆனால், அது நீர் வற்றிய நீர் நிலை. இதனை இலக்கண விளக்கம்,

கன்னி, விடலை, காளை மீளி,
இன்னகை எயிற்றி எயினர் எயிற்றியர்
மறவர் மறத்தியர், புறவுபருந் தெருவை
கழுகு செந்நாய் கல்கெழு குறும்பு
குழிவறும் கூவல் குராஅ மராஅ
உழிஞை பாலை ஓமை இருப்பை
வழங்குகதிக் கொண்டன செழும்பதிக் கவர்தன
ப்கைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகற்சூறை யாடல் பாலைக் கருப்பொருளே

என்கிறது.

இக்கருத்துக்களை எல்லாம் உற்று நோக்கும்போது, பாலை என்னும் நிலம் ஒன்று உண்டு என்னும் உண்மையினை நன்கு உணர்கிறோம்.

தலைப்பு "உமறுப் புலவர் உணர்த்திய பாலை" என்றிருப்பதால் ஏனைய புலவர்கள் உணர்த்திய பாலையும், உண்டு என்பது தொனிக்கின்றதன்றோ? ஆக, பிறர் உணர்த்திய பாலையினையும் சிறிது அறிந்து பின் உமறுப் புலவர் உணர்த்திய பாலைக்குச் செல்வோம்.

கலித்தொகை பாலையின் இயல்பை,

மரல்சாய மலைவெம்ப மந்தி உயங்க
உரல்போல் அடிய உடம்புயங் கியானை
ஊறுநீர் அடங்கலின் உண்கயம் காணாது
சேறு சுவைத்துத்தம் செல்லுயிர் தாங்கும்
புயல்துளி மாறிய போக்கரும் வெஞ்சுரம்

என்று கூறுகிறது. கலிங்கத்துப்பரணி பாலையின் தன்மையினை,

ஆடுகின்ற சிறைவெம் பருந்தின் நிழல்
அஞ்சிஅக்கடு வனத்தைவிட்டு
ஓடுகின்ற நிழல்ஒக்கும் நிற்குப்நிழல்
ஓரிடத்தும் உள அல்லவே.

என்றும்,

தீயின்வாயின்நீர் பெறினும்உண்பதோர்
சிந்தைகூரவாய் வெந்துலர்ந்துசெந்
நாயின்வாயின்நீர் தன்னைநீர்என
நவ்வி நாவினல் நக்கி விக்குமே

என்றும் கூறுகிறது. இந்த அளவிலும் கலிங்கத்துப் பரணி பாலையின் வெம்மைக் கொடுமையினை உணர்த்தி அமையவில்லை.

பாலை நிலத்தில் உள்ள ஒரு மணலைக் கொண்டு சென்று கடலில் இட்ட அளவில் கடல் அப்பாலை மணல் ஒன்றன் வெப்பத்தால் வறண்டுபோய் இருக்குமே! அதன்பின் கரை வழியே இலங்கையைச் சேர்ந்திருக்கலாமே! ஏன் குரங்குகள் மலைகளையும் கற்களையும் கொண்டுவந்து கடலில் பாலம் அமைக்கத் துன்பப் பட்டிருக்கவேண்டும் என்ற கருத்தில்,

அணிகொண்ட குரங்கினங்கள் அலைகடலுக் கப்பாலை
மணல்ஒன்று காணுமல் வரைஎடுத்து மயங்கினவே

என்று கூறி அமைதியுறுகின்றது.

கம்பர் பாலையின் வெம்மையினைக் கூறும்போது,

படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகரும்நா
முடியவேம் முடியமூ டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வேம் மழையும்வேம் மின்னினோ
டிடியும்வேம் என்னில்வே றியாவைவே வாதவே

என்று கூறியுள்ளனர்.

இனி உமறுப்புலவரிடத்துச் செல்வோமாக.

பாலை நிலம் வெம்மை மிகுதியினுல் வெடித்துக் காணப்பட்டது எனப் பாலை வெம்மையின் கொடுமையைக்கூறுதற்கு முகவுரைபோல 'வீசியகானல் சுடச்சுடக் கருகி விடர் விடும் பாலை' என்று கூறத் தொடங்குகிருர். பாலையின் வெம்மையின் கொடுமைக்கு எந்த எடுத்துக் காட்டைக் காட்டுவது என்பது அறியாமல் மயங்குகின்றேன்என்று கூறிப் பின் அதன் கொடுமைக்கு ஏற்ற எடுத்துக்காட்டினையும் இயம்பியே உள்ளனர். அங்ஙனம் இயம்பிய பா,

பின்னிய திரைவா ருதியினைச் சுவற்றிப்
பெரும்புறக் கடலினைத் தேக்கித்
தன்னகம் களித்து வடவையின் கொழுந்து
தனிவிளை யாடிய தலமோ
பன்னரும் தென்கீழ்த் திசையினன் திரண்ட
படையொடும் இருந்தபா சறையோ
உந்நதக் ககன முகடற உருக்கும்
உலைகொலோ எனஅறி கிலமால்

என்பது. ஈண்டுப் பாலை உலக முடியும் காலத்து, எழும் வடவாமுகாக்கினி விளையாடும் இடம் என்றும், சூரியன் தன் படையுடன் தங்கியுள்ள பாசறை என்றும், ஆகா யத்தையும் உருக்கும் உலைக்களம் என்றும் கூறிப் பாலை யின் வெம்மையை விளக்கினர்.

புலவர் குறிப்பிடும் பாலையில் பருந்தின் நிழலும் கரிந்தது. மரங்களும் கரிந்து தோன்றின. ஒரு துளி நீரும் அங்கு இல்லை. மக்களின் நடமாட்டம் ஒன்றும் இல்லை. ஆனால், பேய்கள் மட்டும் திரிந்துகொண் டிருந்தன. இந்தக் கருத்துக்களை,

பருந்திருந் தெழுந்து பறந்தசில் நிழலும்
 பற்றறுக் கானலில் தேய்ந்த
கரிந்திலை தோன்று தொவ்வொரு விருக்கம்
 கண்களின் குலம்எனத் தோன்றும்
எரிந்துஎரி மேய்ந்து கரிந்துவிண் ணிடம்காந்
 திடும்தரை ஒருதுளி நீரும்
அருந்திடக் கிடையா தலகைகள் திரிந்தங்
 காள்வழக் கற்றவெம் கானல்

என்று பாடிக்காட்டினர் பாவலர்.

ஒரு துளி நீரும் அருந்திடக் கிடையாது என்பது கலித்தொகையில் வரும்,

உண்ணீர் வறப்பப் புலர்வாடு காவிற்குத்
தண்ணீர் பெறுஅத் தடுமாற் றருந்துயரம்
கண்ணீர் நனைக்கும் கடுமைய காடு

என்பதை நமக்கு நினைவூட்டுகிறது. பாடலில் அலகை கள் திரியும் வெம்கானம் என்பதால் அக்கானம் பேய் கட்கு இருப்பிடம் என்பதும் போதருகின்றது.

இதனைத் தட்சயாக பரணியும் பாலையில் பேய்கள் நடமாடுவதை,

பிணங்கடும்கனலும் இன்றி வெந்துசில
வாய்மிமிர்ந்துபில வாயபேய்
நிணம்கரைந்துருக நெய்யை நீரென
நினைந்து நாவினை நனைக்குமே

என்று காட்டுகிறது.

பாலைவனத்தில் ஆட்களின் நடமாட்டம் இல்லை என்பதைப் புலவர் 'ஆள் வழக்கற்ற வெம் கானம்' என்பர். கலித்தொகை "புள்ளும் வழங்காப் புலம்பு கொள் ஆர் இடை" என்கிறது. அதாவது பறவைகள் கூடப் பாலையில் பறக்காவாம். மேலும், அக்கலித் தொகை மக்கள் நடமாட்டம் பாலையில் இல்லாமைக்கும் காரணம் கூறுகிறது. அதாவது பாலையில் வாழும் மக்கள் யாரேனும் தப்பித் தவறி அவ்வழியே வந்தால் அவர்களிடம் உள்ள பொருளைப் பறிக்க அவர்களை வதைப்பார்களாம். பொருள் இல்லை என்பதை வந்து அகப்பட்டவர்கள் கூறினாலும், அவர்களை வதைத்து அவர்கள் வதை பொறுக்க முடியாமல் துள்ளுவதைக் கண்டு இன்புறுவார்களாம். இதனை அக்கலித்தொகை,

அற்றம்பார்த்து அல்கும் கடுங்கண் மறவர்தாம்
கொள்ளும் பொருளிலர் ஆயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வவ்வலின்

என்கிறது. இக்கருத்துக்கள் அனைத்தையும் உட்கொண்டே உமறுப்புலவர் ஆள் வழக்கற்ற வெங்கானம் என்றனர்.

பாலையில் அகப்பட்டவர்கள் பட்ட பாட்டினைப் புலவர் கல்லும் கரைந்துருகும்வண்ணம் பாடி அறிவித்துள்ளனர். அதுவே,

பாடுறு புனல்அற் றெவ்வொரு காதம்
　　படுபரல் பரப்புநால் திசைக்கும்
ஓடுவர் திரும்பி மீள்குவர் அடிசுட்
　　டுச்சியும் வெதுப்புற உலர்ந்து
வாடுவர் துகில்கீழ்ப் படுத்திஒட் டகத்தின்
　　வயிற்றிடைத் தலைநுழைத் திடுவார்
தேடும் பொருட்கோ உயிர்இழப் பதற்கோ
　　செறிந்திவண் அடைந்தனம் என்பர்

என்பதாகும். இப்பாடலில், 'அடிசுட்டு உச்சியும் வெப்புற உலர்ந்து வாடுவர்'' என்பதும், ஒட்டகத்தின் வயிற்றிடைத் தலை நுழைத்திடுவர் என்பதும், உள்ளத்தை உருக்கவல்ல வரிகள். பாலையின் கொடுமையினைக் கூறும்போது, அரிய உண்மைக் கருத்துக்களையும் இயைத்துப் பாடுவது புலவர்களின் புலமையாகும். இதனைக்கலித்தொகையில் பாலைக் கலி பாடிய புலவர்,

வறியவன் இளமைபோல்
　　வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போல்
　　சேர்ந்தார்க்கு நிழல்இன்றி
யார்கண்ணும் இகந்துசெய்
　　திசைகெட்டான் இறுதிபோல்
வேரொடும் மரம்வெம்ப
　　விரிகதிர் தெறுதலின்
அலவுற்றுக் குடிகூவ
　　ஆறின்றிப் பொருள்வெஃகிக்

கொலைஅஞ்சா வினைவரால்
கோல்கோடி அவன்நிழல்
உலகுபோல் உலறிய
உயர்மர வெஞ்சுரம்

என்று கூறும் வரிகளில் காணலாம்.

இதைப்போலவே, உமறுப்புலவரும் பாலையின் வர்ணனையில் ஓர் அரிய கருத்தை உவமைமூலம் காட்டி வெளிப்படுத்தியுள்ளனர். மான் கூட்டங்கள் நீர் இல்லாமையால் பேய்த்தேரை (கானல் நீரை) நீர் எனக் கருதி ஓடி ஓடிப் பின் நீர் அன்று என்று உணர்ந்து வாடித் தவித்து நின்றன. இங்ஙனம் ஓடித் தவித்து வருந்திநின்ற நிலை அற்பர்களின் இடம் சென்று பல முறை கேட்டும் பயனற்றுக் கால் ஓய்ந்து வாடிய பல் கலைப் புலவோர்கள் போன்றதாம். இக்கருத்தடங்கிய பாடல்தான்,

பாலைஎன் றுலர்ந்த செந்நிலக் கானல்
பரப்பினைப் புனல்என ஓடிச்
சாலவும் இளைத்துத் தவித்துழை இனங்கள்
தனித்தனி மறுகிய மறுக்கம்
மாலுளர்ந் திருண்ட புனம்அனச் சிறியோர்
மருங்கினில் இரந்திரந் திடைந்து
காலறத் தேய்ந்த பலகலை மேலோர்
கருத்தினில் வருத்தம்ஒத் தனவே

என்பது. கொடுக்கறியா குலாமரிடம் சென்றால் கால் தான் கடுக்கும்; புண்தான் உண்டாகும். இவ்வாறு மற்றும் ஒரு புலவரும், 'வஞ்சகர்பால் நடந்தலைந்த காலில் புண்ணும்' என்று கூறி வருந்தியுள்ளனர்.

மான் இனங்கள் கானல் நீரை உண்மை நீர் என்று கருதி ஓடி இளைத்த நிலையினைக் கலித்தொகையும், கனிந்த மொழியில்,

பொரிமலர்ந் தன்ன பொறிய மடமான்
திரிமருப் பேஎறுடு தேரல்தேர்க் கோட''

என்று மொழிகிறது.

உமறுப்புலவர் சமயம் இஸ்லாமிய சமயமேயாயினும் பிற சமயத்தவர் தெய்வங்களைத் தமிழ் மரபுக்கு ஏற்பக் குறிப்பிட்டுச்செல்வதில் முன்நிற்பவரே அன்றிப் பின் நிற்பவர் அல்லர்.

நால்வகை நிலங்கட்குரிய தெய்வங்கள் இருப்பது போல் பாலைக்கும் தெய்வம் உண்டு. அத்தெய்வம் கொற்றவை ஆவாள். அவளே கன்னி, காளித்தெய்வம் எனக் குறிக்கப்படுவாள். அவளது கோயில் பாலையில் உண்டு. இதனைத் தட்சயாக பரணி,

''நெடுங்குன் றேழும் பிலம்ஏழும்
நேமிக் கிரியும் கடல்ஏழும்
ஒடுங்கும் பாகத் துறைமோடி
உறையும் காடு பாடுவாம்''

என்று குறிப்பிடுகிறது.

கலிங்கத்துப் பரணியில்,

''களப்போர் விளைந்த கலிங்கத்துக்
கலிங்கர் நிணக்கூழ் களப்பேயின்
உளப்போர் இரண்டு நிறைவித்தாள்
உறையும் காடு பாடுவாம்''

எனவும் வருதல் காண்க. இம்மரபுபடி உமறுப்புலவரும் பாலைக்குத் தெய்வம் கூறுவோராய்,

மூவிலை நெடுவேல் காளிவீற் றிருப்ப
முறைமுறை நெட்டுடல் கரும்பேய்
ஏவல்செய் துறைவது"

என்று பாடியுள்ளனர். இதனால் உமறுப்புலவர் எதனையும் மரபு கெடாது மொழியவல்லவர் என்பது புலனாதல் காண்க.

உமறுப்புலவர் தமிழகத்தில் தோன்றி வளர்ந்தவர். பல தமிழ் இலக்கண இலக்கிய நூல்களைப் படித்தவர். படித்தவற்றைத் தாம் பாடியுள்ள சீறாப்புராணத்தில் புகுத்தித் தமது நூலைப் பொன்மலர் மணம் பெற்றது போல மேன்மையுறச் செய்தவர். அவரது நூலில் பல சிந்தைக்கினிய கற்பனைகளையும், அரிய நீதிகளையும் காணலாம். ஆகவே, சீறாப்புராணத்தைப் படித்து அதன் இலக்கியச் சுவையை இனிது நுகர்தல் நம்மனோர் கடனாகும்.

# 9. கிறித்தவர் தமிழ்த் தொண்டு

பண்டைக்காலத் தமிழ் இலக்கியங்கள் பெரிதும் செய்யுளால் யாக்கப்பட்டவை. உரைநடை நூல்கள் ஒரு சிலவே தோற்றம் அளித்தன. இறையனார் களவியல் உரை, சிலப்பதிகாரம், அதன் உரை ஆகிய நூல்களை உரைநடை நூல்களுக்கு எடுத்துக்காட்டாக இயம்பலாம். இவைகள் கூட முற்றிலும் உரைநடை நூல்களாக அமைந்தவை எனல் இயலாது. இவை இடையிடையே உரைநடை அமைந்த நூற்கள். இது குறித்தே சிலப்பதிகாரம் உரைநடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்ற பெயரைப் பெற்றுள்ளது. இந்நிலையில் உரைநடை வளத்தைப் பெருக்கியவர்கள் கிறித்து மதப் பெரியார்களான ஐரோப்பியர்கள் எனலாம். உரைநடைகளை மட்டும் இவர்கள் எழுதி வழிகாட்டியவர்கள் அல்லர். தமிழ் அன்னைக்குப் பல அணிகலன்களாகப் பல தமிழ் நூல்களையும் யாத்துள்ளனர். பழங்காலத்தில் தமிழர்கள் சொற்களுக்குரிய பொருள்களை இக்காலத்தைப்போல அகராதிகளைக் கொண்டறிந்திலர், சொற்பொருள்களையும் செய்யுளின் துணை கொண்டுதான் உணர்ந்து வந்தனர். இதனை,

பகவனே ஈசன் மாயோன்
  பங்கயன் சினனே புத்தன்
பகலேநாள் ஒருமு கூர்த்தம்
  பகலவன் நடுவே தேசு

மகரமே சுறுப்பூந் தாதாம்
வசிகூர்மை வசியம் வாளே
அகம்மனம் மனையே பாவம்
அகல்இடம் உள்ளும் ஆமே

என்னும் பாட்டால் உணரலாம். இப்பாட்டின் மூலம் பகவன், பகல், மகரம், அகம் என்னும் சொற்களின் பொருள்களை அறிகிறோம்,

ஆனால், இக்காலத்தில் சொற்களை அகரவரிசையில் கண்டு அவற்றின் பொருளை உணர்கிறோம். இம் முறைப்படி அமைந்த நூலே அகராதி எனப்படுகிறது. இந்த எளிய முறையினை அமைத்துத் தந்தவர்களும் கிறித்தவப் பாதிரிமார்களே. முதல் முதல் தமிழில் அச்சு நூல்களை அச்சு வாகனத்தில் ஏற்றி அச்சு நூல் களைத் தந்தவர்களும் இவர்களே. இவையே அன்றித் தமிழினை அவர்கள் நன்கு பயின்று, மேற்குநாட்டவர்கள் பலரையும் பயிலுமாறு செய்ய நந்தம் தமிழ் நூல்களுள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்களும் ஆவர். இவ்வாறு பல்லாற்றானும் தமிழுக்குத் தொண்டு புரிந்த பெரியோர்களுள் இருவர்களைப்பற்றிச் சிறிது பார்ப்போமாக.

### வீரமா முனிவர்

இவர் இத்தாலி தேசத்தில் பிறந்தவர். இவரே கான்ஸ்டண்ட்டின்,ஜோஸப்பெஸ்கி என்பவர். இவரைத் தைரியநாதசாமி என்றும் கூறுவர். இவர் கி. பி. பதி னேழாம்நூற்றாண்டில் தோன்றியவர். தமது கிறித்தவச் சமயத்தைப் பரவச்செய்யத் தமிழ் நாட்டிற்கு வந்தவர். இவர் இந்தியர்களைப்போல நடை, உடை, பாவனை

உணவு முதலியவற்றை மேற்கொண்டவர். இவர் புலால் புசித்திலர். தமிழ்ச் சமயல்காரர்களை அமர்த்தித் தூய உணவு சமைக்க ஏற்பாடு செய்தனர். ஒரு வேளையே உண்டு வந்தனர். கோபிச்சந்தனம் நெற்றியில் இட்டு வந்தனர். காவி உடை உடுத்தினர். காலில் கட்டை மிதியடி பூண்டு நடந்தனர். காதில் முத்துக்கடுக்கன் பூண்டனர். சிவிகையில் சென்று வந்தனர். புலித் தோலே இவருக்கு இருக்கை ஆகும்.

இவர் தமிழ், தெலுங்கு, வடமொழி, இந்துஸ்தான் பாரசீக மொழிகளைப் பயின்றவர். இவர் பன்மொழி களைப் பயின்றிருந்தும் தமிழ்மொழியில்தான் பல நூல் களைச் செய்துள்ளனர். அவையே, சதுர் அகராதி, தமிழ் இலத்தீன் அகராதி, தொன்னூல் விளக்கம், பரமார்த்த குரு கதை, வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம், தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம் முதலியன.

இவற்றுள் தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம் பகம் என்னும் நூற்களைப்பற்றிய சிறு குறிப்பை மட்டுமே ஈண்டுக் காண்போமாக.

தேம்பாவணி: இது பெருங்காப்பிய அமைப்பில் அமைந்த நூல். தேம்பாவணி என்பது இனிய பாவின் அழகு கொண்டு விளங்கும் நூல் என்னும் பொருள் தரும் தொடராகும். வாடாத மாலை என்று பொருள் கூறினும் அமையும். இஃது ஏசுப்பெருமானாரின் அருமைத் தந்தையாராகிய சூசையப்பரது வரலாற்றைக் கூறுவது. இதில் சிந்தாமணி, கம்பராமாயண நடை, கருத்தழகு முதலியவற்றைக் காணலாம்.

கல்லை ஏற்றலும் கவணினைச்
சுழற்றலும் அக்கல்
ஒல்லை ஒட்டலும் ஒருவரும்
காண்கிலர் இடிக்கும்
செல்லை ஒத்தன சிலைநுதல்
பாய்தலும் அன்னான்
எல்லை பாய்ந்திருள் இரிந்தென
வீழ்தலும் கண்டார்

என்பது தேம்பாவணிப்பாடல். இதன் பொருள், 'கோலி யாத்து என்னும் கொடியவனைக் கொல்லத் தாவீது பரமண்டலத்தில் இருக்கும் பிதாவின் அருளையே துணை யாகக் கொண்டு, கவண், கல்லுடன் புறப்பட்டான். கோலியாத்தின் நெற்றியில் கல்லை எறிந்தான். அவன் அதனைத் தாங்க இயலாமல் மண்ணில் சாய்ந்தான். ஆனால், மக்களால் கல்லை எப்போது அவன்மீது எறிந் தனன் என்பதைக் கண்டிலர். கல்லடி ஓசையை மட்டும் கேட்டனர். கோலியாத்துக் கீழே சாய்ந்த தைக் கண்டனர்' என்பது.

இது கம்பர் பாடியுள்ள,

தடுத்திமை யாமல் இருந்தவர் தாளின்
மடுத்ததும் நாணுதி வைத்ததும் நோக்கார்
கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால்
எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்

என்னும் செய்யுளைத் தழுவியது என்று கூறுவதில் எவர்க்கும் ஐயம் எழுமோ? எழாது. அதாவது, 'இராமன் மிதிலையில் வில்லை வளைத்தபோது உற்று இமை கொட்டாது பார்த்திருந்தவர்கள் யாவரும்

வில்லில் நாண் பூட்டியதைக் கண்டிலர். ஆனால், வில்லை எடுத்ததைக் கண்டனர். அஃது ஒடிந்த ஓசையைக் கேட்டனர்' என்பது.

திருக்காவலூர்க் கலம்பகம்: இது திருக்காவலூர் அடைக்கல மாதாவின்மீது பாடப்பட்ட நூல் ஆகும். அடைக்கல மாதா ஏசுப்பெருமானின் அன்னையாவார். திருக்காவலூர் காவிரியாற்றின் வடகரையில் உள்ள ஏலாக்குறிச்சி என்ற சிற்றூரில் உள்ளது. இதனை இக் கலம்பக நூலில் வரும்,

கனைபூத்த சோணாட்டுக்
காவிரியின் வடகரைமேல்
சினைபூத்த நிழல்பொழில்வாய்ச்
சிங்கநெடுங் கொடிநிழற்றும்
திருக்காவ லூர்அகத்துத்
திகழ்ஒளிவாய் மணிக்கோயில்
அருட்காவல் இயற்றினமை
அளிப்பதுநின் தயைஆமோ

என்னும் பாடலில் காணலாம்.

பார்மேவும் பழிநீப்பப்
பகர்ந்தடங்காப் பரிவுள்ளிச்
சீர்மேவும் திருவுளத்தைத்
தெரிந்தமரர் உளம்பனிப்ப
உருவில்லான் உருவாக
உலகில்ஒரு மகன்உதிப்பக்
கருவில்லாக் கருத்தாங்கிக்
கன்னித்தாய் ஆயினையே

என்பதும் இக்கலம்பக நூலில் வரும் பாடலே.

வீரமாமுனிவர்க்குத் திருக்காவலூர்த் தலத்தில் டுபாடு மிகுதியும் இருந்தது. இதனை இவர் பாடியுள்ள,

தாள்அணிந்த மதிமுதலாத் தமியனும்அக்
 கமலத்தாள் தாங்கி லேனே
கோள்அணிந்த குழல்அணிதார் குடைவண்டார்
 புகழ்பாடி மதுஉண் ணேனே
வாள்அணிந்த வினைப்படைவெல் வலிச்சிங்கம்
 ஈன்றஒரு மானாய் வந்தாள்
கேள்அணிந்த காவல்நலூர்க் கிளர்புனத்துப்
 பசும்புல்லாய்க் கிடவேன் நானே

என்னும் பாடலால் உணரலாம்.

இந்தச் செய்யுளை உற்று நோக்கும்போது, குலசேகராழ்வார் திருமொழியாம்,

வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடமலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்துடையேன் ஆவேனே

என்பதை அடி ஒற்றியது என்பது புலனாகின்றதன்றோ?

இதுவரை மேலைநாட்டுக் கிறித்தவப் பெருமக்களுள் தமிழுக்கு அரும்பெருந் தொண்டுபுரிந்த ஒருவரைப் பற்றி அறிந்தனம். அடுத்துத் தமிழகத்துப் பிறந்து கிறித்தவச் சமயத் தொடர்புகொண்டு தமிழ் மொழிக்குப் பணிபுரிந்த ஒரு பெரியாரைப்பற்றிப் பார்ப்போமாக.

## வேதநாயகம் பிள்ளை

இவர் சோழநாட்டில் திரிசிரபுரத்துக்கு அருகி லுள்ள குளத்தூரில் கத்தோலிக் கிறித்தவச் சமயத்தில் பிறந்தவர். ஆங்கிலமும் அருந்தமிழும் அறிந்தவர். டிஸ்டிரிக் முனிசீபாகப் பணிபுரிந்தவர். இவர் திரிசிர புரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர் களின் நண்பர். மாணாக்கர் என்றும் கூறுவாரும் உளர். இவர் நீதிநூல் என்னும் நூலை எழுதியவர். இதில் பல வகை நீதிப்பாடல்கள் உள்ளன.

இந்த நீதி நூலின் அவையடக்கச் செய்யுள் ஒன்றில், உலகில் நடவாத ஒரு நாடகத்தை உவமை காட்டிப் பாடி இருப்பது படித்துச் சுவைத்தற்குரிய தாகும். அப்பாடல்,

முடவரே ஆட அந்தர்
　　முன்னின்று பார்த்து வக்கத்
திடமொடு மூகர் பாடச்
　　செவிடர்கேட் டதிச யிக்கக்
கடல்உல கினில்கண் டென்னக்
　　கனவினும் கலையைத் தேரா
மடமையேன் உலக நீதி
　　வகுத்திடத் துணிந்தேன் மன்னோ

என்பது.

நீதிநூலில் இலஞ்சம் வாங்குபவர்பால் செல்லற்க என்பதை நல்ல உவமைகளைத் தந்து விளக்கிப் பாடி யுள்ளார். அச்செய்யுளை நாம் படித்தறியில், இலஞ்சம் வாங்குபவர்மாட்டு நாம் செல்ல நம் உளம் எழுமோ? எழாது. அப்பாடலைக் காண்மின்!

வலியினால்இ லஞ்சங் கொள் மாந்தர்பால் சென்று
மெலியவர் வழக்கினை விளம்பல் வாடிய
எலிகள்மார்ச் சாலத்தின் இடத்தும் மாக்கள்வெம்
புலிஇடத் தும்சாண் புகுதல் ஒக்குமே

என்பது அப்பாடல்.

இவர் கீர்த்தனைகளையும் பாடியுள்ளார். அவை சர்வசமய சமரசக் கீர்த்தனைகள். பெண்மதிமாலை என்னும் நூலையும் இயற்றியுள்ளார். இவர்தம் காலத்தில் திருவாவடுதுறை ஆதீன கர்த்தராக இருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகரை மனமாரப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார். இவர் பாடல்கள் சுவை மிக்கனவாக இருக்கும். இவர் தொழில் துறையில் இருந்தபோது பலர் இவரை வந்து பார்ப்பது வழக்கம். ஆனால், அடுத்து இவர் தொழில் துறையிலிருந்து ஓய்வு பெற்ற போது ஒருவரும் வந்து கண்டிலர். இதனைச் சுவைபட,

அழையாமல் முன்வரு வோர்இப்
பொழுதிங் கழைத்தும் வரார்
கழையாம் எனஇன்சொல் கூறி
யவர்வன்சொல் கற்றுக்கொண்டார்
பழையார் நமைஅறி யார்ஆயி
னார்இப் படிஉற நம்
பிழையா தெனில்உத்தி யோகத்தைக்
கைவிட்ட பேரிழவே

என்று பாடி இருப்பதனால் அறியலாம்.

நாட்டில் மழை பெய்யாத போது மேகத்தை நோக்கிப் பத்துச் செய்யுட்களைப் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று,

வேண்டுங்கால் நீபெய்யாய் வேண்டாத போதுபெய்வாய்
தாண்டுநீ செய்வதெல்லாம் தப்புகளோ—நீண்டுலவும்
வட்டமுகி லேஉனக்கு மாசெனப் பேர்தந்தோர்க்குப்
பட்டமது கட்டுவேன் பார்

என்பது.

இவர் பல கதைகளையும் எழுதியுள்ளனர். அவற்றுள் தலைசிறந்தது பிரதாப முதலியார் சரித்திரம். இது படிக்கப் படிக்க நகைச்சுவை தருவதாகும். ஞான சுந்தரி என்னும் நாவல் ஆசிரியரும் இவரே. இவரது காலம் இ. பி. 19ஆம் நூற்றாண்டு

# 10. செல்வத்தின் சிறப்பு

'பணம் பந்தியிலே குலம் குப்பையிலே' என்பது நம் நாட்டுப் பழமொழிகளில் ஒன்று. இப்பழமொழியின் கருத்துக் குலத்தைவிடப் பணமே முன் நிற்க வல்லது என்பது. இப்பணத்தினால், ஒருபொருளாக மதிக்கப்படாதவர்களும் மதிக்கப்படுவர். இதனைத் திருவள்ளுவர்,

பொருள்அல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருள்அல்ல தில்லை பொருள்

என்றனர். ஏன் இவ்வாறு கூறினர்? இப்பொருளால் ஆகாதது எதுவும் இல்லை. வெற்றி தரும்; பெருமை தரும்; கல்வி தரும்; அழகு தரும்' அடங்கி இருந்தவர்களை விளக்கமுறச் செய்யும். ஆகவே, இதைவிடச் சிறந்தது எதுவும் இல்லை. இந்த உண்மைகளைக் கீழ் வரும் பாடல்கள் நமக்கு நன்கு உணர்த்தி நிற்கின்றன. சீவகசிந்தாமணி,

வென்றி ஆக்கலும் மேதக வாக்கலும்
அன்றி யும்கல்வி யோடழ காக்கலும்
குன்றி னார்களைக் குன்றென ஆக்கலும்
பொன்துஞ் சாகத்தி னாய்பொருள் செய்யுமே

என்றும், கந்தபுராணம்,

அளப்பரும் விஞ்சையே அன்றி மேன்மையும்
உளப்படு தன்மையும் உயர்ந்த கீர்த்தியும்
கொளப்படு கொற்றமும் பிறவும் கூட்டலால்
வளத்தினில் சிறந்தது மற்றொன் றில்லையே

என்றும், கம்பராமாயணம்,

பூரியர் தமைவேந் தாக்கும்
புவிபுரப் பிக்கும் துய்க்கும்
சீரிய உண்டி சேர்க்கும்
தேவர்தம் உலகம் போக்கும்
காரியம் அனைத்தும் கூட்டும்
கருதலார் தம்மை வாட்டும்
கூரிய திதன்மேல் இல்லை
கொழும்பொருளீர் கொண்மின் என்றார்

என்றும், வளையாபதி,

குலம்தரும் கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைகள் அழிபசி தீர்க்கும்

என்றும் கூறியிருத்தலைக் காண்க.

கையில் பொருள் இன்றெனில், எவரும் நம்மை மதியார், மதிக்காமல் இருப்பினும் கவலை இல்லை. நம்மை இகழ்ந்தும் பேசுவர். செல்வம் நம்மிடம் இருக்குமேல் வாராதவர்களும் வந்து மேன்மேலும் சிறப்புச் செய்வர். இக்கருத்தை நாயனார்,

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லோரும் செய்வர் சிறப்பு

என்று செப்புதல் காண்க. இவரது கருத்தை அடி ஒற்றிப் பழமொழி நானூறு,

அருளுடை யாரும் மற்றல்லா தவரும்
பொருளுடை யாரைப் புகழாதார் இல்லை

என்றும், நல்வழி,

கல்லானே ஆனாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்.

என்றும், நீதிநெறி விளக்கம்,

இன்சொல்லன் தாழ்நடை ஆயினும்ஒன் றில்லானேல்
வன்சொல்லின் அல்லது வாய்திறவா—என்சொலினும்
கைத்துடையான் கால்கீழ் ஒதுங்கும் கடல்ஞாலம்
பித்துடைய அல்ல பிற

என்றும், சீவகசிந்தாமணி 'செல்வர்க்கே சிறப்புச் செய்யும் திருந்துநீர் மாந்தர்' என்றும் கூறுதலை உணர்க. இத்தகைய கருத்தில், 'ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்' 'கையில் பணம் உண்டானால் காத்திருப்பார் ஆயிரம்பேர்' என்னும் பழமொழிகள் நாட்டில் வழங்குதலையும் அறிக.

உலக மக்கள் அருள், அன்பு என்னும் பண்புகளைச் சிறப்பாகக் கொண்டுள்ளனர். அருள், அன்பு இன்ன தன்மையன என்பதை விளக்கவந்த பரிமேலழகர், 'அருளாவது தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை' என்றும், 'அன்பாவது வாழ்க்கைத்துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கள்மேல் காதல் உடையார் ஆதல்' என்றும் விளக்கிப்போந்தார். இத்தகைய அருளுக்கும் அன்புக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதை முதற்பாவலர், 'அருள் என்னும் அன்பீன் குழவி' என்பர்.

அன்பின் வளர்ச்சிக்குச் செல்வமே செவிலித்தாய் என்பது தேவர் கருத்து. இத்தகைய சிறப்புடைய பொருளை நாம் தேடவேண்டுவது நமது கடமை அன்றோ?

இதுகுறித்தே தெய்வப்புலவர், நாம் செல்வத்தைத் தேடவேண்டும் என்பதை வற்புறுத்திக் கட்டளை இடுவார் போன்று, 'செய்க பொருளை' என்

றனர். இப்பொருள் நம்மிடம் இருக்குமேல், அது நமக்குக் கூரிய படைக்கலமாக இருந்து நமது எதிரிகளை அழிக்கும். இந்தக் கருத்தைத்தான்,

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனில் கூரிய தில்

என்றருளிச் செய்தனர்.

இந்தத் தமிழ் மறையின் அடிப்படையில் எழுந்த கருத்துக்களே அகநானூற்றில்,

செறுவோர் செம்மல் வாட்டலும் சேர்ந்தோர்க்கு
உறுமிடத்து உவக்கும் உதவி ஆண்மையும்
இல்இருந் தமைவோர்க் கில்என் றெண்ணி
வெஞ்சுரம் இறந்தனர்

என்பதும், கலித்தொகையில்,

பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
தரும்எனப் பிரிவெண்ணிப் பொருள்வயின்
சென்றநம் காதலர்

என்பதும் ஆகும்.

பொருளின் சிறப்பைத் தனித்த முறையில் எடுத்து இயம்புதற்கே தமிழில் பணவிடு தூது என்னும் நூலும் எழுந்தது.

மக்கள் அடையவேண்டிய புருடார்த்தங்கள் நான்கு. அவையே அறம், பொருள், இன்பம், வீடு என்பன. ஈண்டு வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து. ஆகவே, பெரிதும் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றைப் பற்றியே கருத்

றதைச் செலுத்துதல் உலகில் நடை முறையாக இருக்கிறது. அறம் பொருள் இன்பம் என்னும் வைப்பு முறையில் பொருளே நடுநாயகமாகத் துலங்குகிறது. இந்த நடுநாயகமாகிய பொருள் கைவரப்பெறுமானால், இதற்கு முன்னும் பின்னுமுள்ள அறமும் இன்பமும் தாமே வந்து இயையும். இப்பொருள் இன்றேல் துன்பமே இயையும். இத்துணைக் கருத்துக்களையும் உள் அடக்கி நாலடியார் என்னும் நூல்,

வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்
நடுவண தெய்த இருதலையும் எய்தும்
நடுவண தெய்தாதான் எய்தும் உலைப்பெய்து
அடுவது போலும் துயர்

என்று இயம்புகிறது.

பணவிடு தூது இப்பணத்தைப் பற்றிப் பலப்படி புகழ்ந்துள்ளது. அது பணத்தை,

பணமே எனைப்படைத்த பாக்கியவா னேவங்
கணமேஎன் ஆருயிரே கண்ணே—குணநிதியே
கோலம் பலஎடுத்துக் கோவேநீ செய்யும்இந்ர
சாலம் பிறர்அறியத் தக்கதோ—ஞாலமிசை
பணம்என்று உன்னைப் படைக்காத சென்மம்
பிணம்என்பர் கண்டாய் பெரியோர்

என்று கூறுதலைக் காண்க.

இன்னோரன்ன மாண்புகட்குக் காரணமான பணத்தை எவ்வழியானும் தேடுக என்பது நம் முன்னோர் கருத்தன்று. இப்பொருள் தீதின்றி வரும் பொருளாக இருக்கவேண்டும். அன்பினாலும் அருளா

லுமே வரும் பொருளாக அமைதல்வேண்டும் இவ்வாறாக அமையாத பொருள் அறத்தையோ இன்பத்தையோ தராது. ஆகவே, 'தீய வழியில் வரும் பொருள் தேவை இல்லை, அதனை ஒழிக்க' என்று கண்டித்துப் பாடுவார் போல் பெருநாவலர்,

அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து
தீதின்றி வந்த பொருள்.

அருளொடும் அன்பொடும் வாராப் பொருள்ஆக்கம்
புல்லார் புரள விடல்

என்று பாடி உணர்த்தினர். தெய்வப்புலவர் அறவுரைகளை உள்ளத்தில் கொண்டே சீவகசிந்தாமணி,

ஐயம் இலை, இன்பம்அற னோடவையும் ஆக்கும்
பொய்யில்பொருளே பொருள்மற் றல்ல பிறபொருளே

என்றும், காஞ்சிப்புராணம்,

பழியில் நீங்கிநன் கீட்டிய பசும்பொருள் சிறிதும்
கழிபடாதுநல் வழிப்பயன் படுவது

என்றும் கூறுகின்றன. ஆகவே, நாமும்,

காடுமலை நாடும் கடலோடியும்பொருளைத்
தேடவே வேண்டும் தினகரா

என்று தினகர வெண்பா கூறுவதுபோல நல் வழியில் நிதியம் தேடிச் சிறக்க வாழ்வோமாக.

# 11. காவற்பெண்டு

சங்க காலம் ஒரு பொற்காலம். அக்காலத்துப் புலவர் பெருமக்கள் பாடியுள்ள பாடல்களாலேயே இன்று நாம் தமிழர் என்ற பெருமையுடன் தலைநிமிர்ந்து நிற்கின்றோம். நமது பண்டைய பெருமையினை உணர்கின்றோம். நாகரிகத்தில் தனிசிறந்தவர்கள் என்ற பெருமிதத்துடன் துலங்குகின்றோம்; பிற நாட்டவர்களும் நமது தொன்மையினையும் மேன்மையினையும் போற்றிப் புகழ்கின்ற நிலையைப்பெற்றுள்ளோம். இவை உண்மை; வெறும் புகழ்ச்சியல்ல.

இங்ஙனம் பெருமை தரத்தக்க நிலையில் இருந்தவர்கள் ஆண்பாற் புலவர்கள் மட்டும் அல்லர்; பெண்பாற் புலவர்களும் ஆவர். சங்ககாலத்தில் திகழ்ந்த பெண்பாற் புலவர் பலர். அவர்களுள் ஒருவரே காவற்பெண்டு என்னும் பெயருள்ள பெண்பாற் புலவர்.

இவ்வம்மையார் தம் இயல்புக்கு ஏற்ற தொழிலை மேற்கொண்டே புலவர்மணியாயும் திகழ்ந்தவர். இவர் குழந்தைகளைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துவரும் அரிய பொறுப்பு வாய்ந்த பணியினை மேற்கொண்டு விளங்கியவர். இதனை இவர்க்கு அமைந்துள்ள பெயர் கொண்டே உணர்ந்துகொள்ளலாம். இவ்வம்மையார் பெயர் காவற்பெண்டு என்பதே. இவ்வம்மையார்க்கு இவர் பெற்றோர் எப்பெயர் இட்டு அழைத்தனர் என்பதை நாம் அறிதற்கு இல்லை. காவல் என்பது ஈண்டு வீடு காவலோ, நாடு காவலோ, வாயிற் காவலோ அன்று;

குழந்தையைக் காத்து வந்த காவல் ஆகும். இக்காவலை இப்பெண் மகளார் புரிந்து வந்தமையின் காவற்பெண்டு எனப்பட்டார். பெண்டு என்னும் சொல் பெண் என்னும் பொருளது.

குழந்தைகளைப் பெறுபவர் பெண்டிர். இவர்கள் நற்றாயர். இவர்கள் பிள்ளையைப் பெறுதல் மட்டும் அன்றி, அப்பிள்ளைகளைப் பாதுகாக்கும் கடமையையும் உடையவர்கள்.

இவ்வுண்மை சங்ககாலப் பெண்பாற் புலவராகிய பொன்முடியார் என்பவர், 'ஈன்று புறந்தருதல் என் றலைக் கடனே' என்று கூறுதலாலும், 'ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்' என்ற அகநானூற்றடியாலும் நமக்குத் தெரியவருகிறது. செல்வக்குடியில், அரசர் குடியில் பிறக்கும் பிள்ளைகளைக் காக்கவேண்டிய பொறுப்பினை நற்றாய் மேற்கொள்ளாது பிள்ளைகளைக் காத்தற் கென ஒரு பெண்டிரை அமைப்பர். அத்தகைய பெண்டிர் செவிலித்தாயர் என்ற சிறப்புப்பெயருக்கும் உரியவர். பெற்ற தாயினும் இச்செவிலித்தாயர் குழந்தைகளை நன்கு போற்றி வளர்ப்பர். குழந்தைகளை உண்ண வைப்பதும் உறங்க வைப்பதும் இச்செவிலித் தாயரின் பொறுப்பே ஆகும். குழந்தைகட்கு நோய் முதலிய துன்பம் வரினும், பெரிதும் துயருறுபவள் செவிலித்தாயே. இத்தகைய அரும் பெரும் பணியைப் பெற்றுத் திகழ்ந்தவர் காவற்பெண்டாகிய இப்பெண் பாற் புலவர் என்க.

இனிக் காவற்பெண்டாம் இப்பெண்பாற் புலவர் எதனுல் புலவர் வரிசையில் வைத்து மதிக்கத்தக்கவர்

என்பதையும், எங்கு யாருக்குக் காவற்பெண்டாய் இருந்தவர் என்பதையும் அறியவேண்டுவது நமது கடமையாகும்.

இவ்வம்மையார் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியை வளர்த்த செவிலித்தாயர் ஆவர். அதாவது, காவற்பெண்டு ஆவர். இவ்வம்மையார் சோழமரபில் வந்த பிள்ளையை அன்புடன் காதல் புரிந்து வந்த காரணத்தால், காதற்பெண்டு என்றும் வழங்கப்பட்டவராஞர். இக்காதல், தாய்மைக் காதல். மக்களிடத்தில் குழந்தைகளிடத்தில் காதல் காட்டுதலைக் 'கடந்துளோர்களும் கடப்பரோ மக்கள்மேல் காதல்' என நைடதத்தில் வரும் அடியால் அறிக.

சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளி, தித்தன் என்னும் பெயரிய சோழனுக்கு மகஞவன். தித்தன் உறையூரில் இருந்த சோழன். நொச்சிவேலித் தித்தன் என அகநானூறு கூறுகிறது. நொச்சி மரங்களை வேலியாக உடைய உறந்தையில் வாழ்ந்த தித்தன் என்பது இதன் பொருள். இவ்வாறே இவன் உறந்தையில் இருந்தவன் என்பதைப் புறநானூறும், 'மாவண் தித்தன் வெண்ணெல் வேலியுறந்தை' என்கிறது. உறந்தை என்பது உறையூர் ஆகும். தித்தன் வீரத்திலும் ஈரத்திலும் சிறந்தவன். இதனை, வெல்போர் அருந்தித்தன் என்றும் 'மாவண் தித்தன்' என்றும் இவனைப்பற்றிக் கூறியிருப்பது கொண்டு தெளிக. இவ்வாறு இவனது வீரத்தைச் சாத்தந்தையார் என்னும் புலவரும், இவனது கொடைச்சிறப்பைப் பரணரும் புகழ்ந்து கூறியுள்ளனர்.

மதுரை நக்கீரர், சோழநாட்டுப் பிடவூர்கிழார் மகன் பெருஞ்சாத்தனைப் பாடிய பாட்டில் தித்தனையும் பாடியுள்ளார் எனில், தித்தனது சிறப்பு நமக்குப் புலனாகிறது. அப்பாட்டில் தித்தன் நல்ல அறிவையே அணியாகப் பெற்றவன் என்றும், சீர்சான்ற விழுச் சிறப்புடையவன் என்றும் சிறப்பிக்கப்பட்டுள்ளான் இத்துடன் இன்றி, யானைப் படையுடையவன். அதனோடு யானை வன்மையையும் பெற்றவன் என்ற பொருளில் 'சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்' என்றும் புகழப்பட்டுள்ளான்.

தித்தன் வாழ்ந்த உறையூரின் சிறப்பைப் புலவர் பலர் பாடிப் புகழ்ந்துள்ளனர். மதுரை நக்கீரர் 'செல்லா நல்லிசை உறந்தை' என்கிறார். அதாவது, கெடாத நல்ல புகழையுடைய உறந்தையாம். 'வெண்ணெல் வேலி உறந்தை' என்பர் பரணர்.

மதுரை நக்கீரர் உறந்தையின் உழவர்களின் இயல்பை நன்கு இயம்பியுள்ளனர். அவர்கள் மருத நிலத்தை நன்கு உழுது உண்டும் தமக்குத் துணையாய் இருந்து உழைக்கும் எருதுகள் வயிறார உண்டு உவக்க முல்லை நிலங்களில் மேய விடுவர் என்றும், முயல் இறைச்சி, வாளை மீன், பழஞ்சோறு இவற்றைப் புசித்துப் பூரிப்பர் என்றும், மலர்சூடி மகிழ்வர் என்றும், கள்ளைப் பருகிக் களிப்பு உறுவர் என்றும் பாடி மகிழ்கின்றார்.

அவர் மாதர்களைப்பற்றிக் கூறும்போது, மூங்கில் போலும் தோளையுடையவர்கள், மென்மையான சாயலைப்பெற்றவர்கள், தினையுண்ண வரும் கிளிகளை ஓட்டுபவர்கள் என்றும் பாடியுள்ளார்.

பறவைகளைக் கூறவந்தபோது, புலவர் கானக் கோழி, நீர்க்கோழி, மனைக்கோழிகள் என்று பகுத்து, அவற்றின் செயல்களையும் பாடியுள்ளனர். அகன்ற சேற்றினையுடைய நீர் நிலைகளிலிருந்து பறவைகள் எழுந்து பறக்கும் என்றும் வருணித்துள்ளார்.

இன்னோரன்ன சிறப்பினையுடைய உறந்தையில் வாழ்ந்தவன் தித்தன். இவன் மகனான போரவைக் கோப்பெரு நற்கிள்ளி என்ன காரணத்தாலோ தந்தையைப் பகைத்துக்கொண்டான்.

இப்பகைமை காரணமாகத் தனக்குரிய உறந்தை உரிமையையும் இழக்க நேர்ந்தது. தந்தையைத் தணந்தான். அரச உரிமையையும் இழந்தான். இதனால் வறுமையால் வாடினான். 'சோழ வளநாடு சோறுடைத்து' என்னும் சிறப்புக்குரிய சோழநாட்டில் பிறந்து சிறக்கச் சோறுண்டு வாழவேண்டிய அவன் சோளக்கூழோ, கேழ்வரகு கூழோ அருந்துவதற்கும் இயலவில்லை. புல்லரிசிக் கூழே அருந்தும் விதி அவனுக்கு அமைந்தது. 'ஊழிற் பெருவலி யா உள ?' என்னும் பொய்யாமொழியார் வாக்குப் பொய்க்குமா ?

அவன் அவ்வாறு புற்கை (புல்லரிசிக் கூழ்) உண்டு வாழ்ந்ததைப் 'புற்கை உண்டும் பெருந்தோ ளன்னே' என்னும் அடியால் தெரியவருகிறது. இத்தொடரால் இவன் புற்கை உண்டும் வாடாத வனப்புடைய பெருந்தோளனாய் இருந்தமை பெறப்படுகிறது. கடுகு செத்தாலும் காரம் போகுமா ? சோழ மரபினனான தித்தன் மகன் அல்லனோ இவன் ?

சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளியைச் சாத்தந்தையார் என்னும் ஆண்பாற் புலவரும், பெருங்

கோழி நாய்கன் மகள் நக்கண்ணையாராம் பெண்பாற் புலவரும் பாடியுள்ளனர்.

சாத்தந்தையார் பாடல்களால் இவனது வீரமும், முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனை வென்றதும் அறிய வருகின்றன. நக்கண்ணையார் பாடல்களால் அவ்வம்மையார் இவனைக் காதலித்த குறிப்பும் காணப்படுகின்றது. சாத்தந்தையார் இவனைப் பாடிய பாடல்கள் மூன்று. நக்கண்ணையார் பாடிய பாடல்களும் மூன்று. இந்த ஆறு பாடல்களும் புறநானூற்றில் இன்றும் பொலிகின்றன.

போரவைக் கோப்பெரு நற்கிள்ளி, சோழமரபினன் என்பதை 'ஆர்நார்ச் செறியத் தொடுத்த கண்ணிக் கவிகை மன்னன்' என்பதைச் சாத்தந்தையார் இவனைப் பற்றி அறிவிக்கும் அடியால் அறியலாம் அதாவது, நாரால் கட்டப்பட்ட ஆத்தி மாலையினையும், பிறர்க்கு ஈயக் கனிந்த கையையும் உடைய வீரன் என்பது. 'நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும், இல்லை என மாட்டார் இசைந்து' என்பது நம் முன்னோரது நடைமுறை வாக்கன்றோ? ஆகவே, இவனது கை, கொடுக்கக் கவிந்த கை ஆயிற்று.

போரவைக் கோப்பெரு நற்கிள்ளி முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனொடு போர் தொடுக்கவேண்டிய வாய்ப்பு நேர்ந்தது. இவனோ நாடிழந்தவன்; தந்தையாரின் சார்பு நீங்கினவன். இவனுடன் போர் புரிய வருபவன் சிறந்த வீரன். மல்லன் என்னும் பெயரே அவனது உடல் வன்மையினையும், மற்போர் தொடுக்கும் திறனையும் வெளிப்படுத்தி நிற்கிறது. ஆகவே, பெருநற்கிள்ளி காலாட்படையுடனும் யானைப்படையுடனும்

போர்க்குச் சென்றனன். இவனது படையின் ஒலி கடல் ஒலியினும் சிறந்ததாய் இருந்தது. யானையின் ஓசையோ, கார்கால இடி ஓசைபோல இருந்தது.

ஈண்டு ஓர் ஆசங்கை எழலாம். அதாவது, நாடு இழந்து வறுமையால் வாடிய போரவைக் கோப்பெருநற்கிள்ளிக்குப் படை ஏது என்பதே அந்த ஐயம். இவன் தந்தை தம் மகன் போருக்குச் செல்வதை அறிந்து தம் படையினை அனுப்பி இருக்கவேண்டும். இன்றேல், ஏது படை? 'தானுடாவிட்டாலும் தன் தசை ஆடும்' என்பது பழமொழி அன்றோ?

விபீடணன் தன் தமையனான இராவணனை வெறுத்தான்; பழித்தான்; இந்த அளவிலும் நில்லாமல் தன் அண்ணனுக்கு நேர்ப் பகைவனான இராமனிடமே சென்று சரண் புகுந்தான். அந்த இராமனால் இராவணன் இறக்கவும் வழிவகைகள் செய்தான். இராவணனும் இறந்தான். தன் அண்ணன் நல்லோன் அல்லன். இறந்ததே நல்லது என்று எண்ணி மகிழ்ந்தான் அல்லன் விபீடணன். தன் தமையன் இறப்புக்குறித்து வாய்விட்டு அரற்றினன். அவ்வரற்றல் யாவர் உள்ளத்தையும் உருக்கவல்லது.

உண்ணாதே உயிர்உண்ணா தொருநஞ்சு;
சனகிஎனும் பெருநஞ்சு சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
உயிர்!நீயும் களப்பட் டாயே!
எண்ணாதேன் எண்ணியசொல் இன்றினித்தான்
எண்ணுதியோ? எண்ணில் ஆற்றல்
அண்ணாவோ! அண்ணாவோ! அமரர்கள்தம்
பிரளயமே அமரர் கூற்றே!

என்னும் இப்பாடலைப் படித்துப் பாருங்கள். உண்மை தெரியவரும்.

இதனை நோக்கும்போது, தன் உறவுபற்றி இரக்கமே தோன்றும் என்பது புலனாகிறது. ஆகவே, தித்தன் தன் மகன் பகைகொண்டு வெளியேறினாலும், இவன் மல்லனோடு போர்புரியத் தொடங்கியபோது தன் படையினை அனுப்பி இருப்பன் என்று யூகிக்க வேண்டி உளது. அப்படையின் வன்மையோ 'ஆர்ப் பெழு கடலினும் பெரிது, அவன் களிற்ற கார்ப்பெயல் உருமின் முழங்கல் ஆனாவே' என்றனர் சாத்தந்தையார்.

போரவைக் கோப்பெரு நற்கிள்ளி படைப்பலத்துடன் போர்க்குச் சென்றானாயினும், தனக்குத் தானே உதவி என்பதுபோலத் தானே தனித்துப் போர் செய்து வெற்றி காணக்கூடியவன். இவன் கையகப்பட்டவர் எவராயினும் தப்புதல் அரிது. இவன் செய்யும் போர் விரைந்து செய்யும் போர். இது சாத்தந்தையார், தைத்தற்குச் செலுத்தும் ஊசியைவிட வேகமுடையது என்ற உவமை காட்டி உரைப்பதால் அறியவருகிறது. இதனைப் புலவர் வாக்காகிய 'ஊசியின் விரைந்தன்று மாதோ ஊர்கொளவந்த பொருநனொடு ஆர்புனை தெரியல் பெருந்தகை போரே' என்ற அடிகளால் அறிந்துகொள்ளலாம். ஈண்டு ஊர் கொள வந்த பொருநன் ஆமூர் மல்லனாய் இருக்கவேண்டும். ஆர் புனை தெரியல் நெடுந்தகை போரவைக் கோப்பெரு நற்கிள்ளிதான் என்பதைக் கூறவும் வேண்டுமோ? இவன் குல மாலையாம் ஆத்தியைப் புனைந்திருந்தமையின், 'ஆர் புனை தெரியல் நெடுந்தகை' எனப்பட்டான்.

ஆத்தி மாலை சோழர்க்கு உரியது என்பதை ஈண்டு நினைவு கொள்க.

இன்னோரன்ன குடிச்சிறப்பும் மறச்சிறப்பும் கொண்ட கோப்பெரு நற்கிள்ளி, முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனுடன் பொருது வென்ற சிறப்பைக் காண்போமாக.

மல்லன் ஆமூரினன் என்பதும், மிக்க வன்மையுடையவன் என்பதும் அவனைப்பற்றிச் சாத்தந்தையார், 'ஆமூர் ஆங்கண் மைந்துடை மல்லன்' என்று சுட்டி இருப்பதால் அறியலாம். அவனது வலியை அடக்கினான் என்பதை 'மதவலி முருக்கி' என்னும் தொடர்விளக்கிக்கொண்டிருக்கிறது. மல்லன் மற்போரில் சிறந்தவன். இக்குறிப்பு அவன் பெயரால் அறிய வருகிறது என்பதை முன்பே கண்டோம். ஆகவே, அவனோடு வாட்போரோ விற்போரோ பெருநற்கிள்ளி தொடங்காமல் மற்போரே தொடங்கினான். அவனோடு மற்போரிட்டு அவனைக் கீழே சாய்த்தான், சாய்ந்த அவனது மார்பின்மீது ஒரு காலை ஊன்றினான். அப்பொழுது மல்லன் சோழனது பிடியினின்று விலகப் பல முயற்சிகளைச்செய்தான். இத்தகைய அவனது செயலைத் தடுக்க மற்றொரு காலால் அவனது முதுகையும் வளைத்துக்கொண்டான் கிள்ளி. இந்தக் காட்சியினைப் புலவர் சாத்தந்தையார், 'ஒருகால் மார்பொதுங் கின்றே, ஒரு கால் வருதார்தாங்கிப் பின்ஒதுங் கின்றே' என்று பாடி அறிவித்துள்ளனர். இந்த அளவிலும் பெருநற்கிள்ளி நின்றான் அல்லன். அவன் கால்களையும் தலையையும் முறித்து வெற்றி கொண்டான்; மல்லனது தலையை காலையும் பெருநற்கிள்ளி முறித்ததற்கு நல்ல உவமை

யினைப் புலவர் குறிப்பிட்டுள்ளார். அதுவே, 'பசித்துப் பணைமுயலும் யானைபோல இருதலை ஒசிய' என்பது. அதாவது, பசிகொண்ட யானை மூங்கிலை முறிப்பது போலக் கரங்களும் தலையும் முறிய மோதி' என்பதாகும்.

சாத்தந்தையார், பெருநற்கிள்ளியின் வீரத்தை நேரில் கண்டே இவ்வாறெல்லாம் பாடியிருக்கிறார். தாம் கண்டதையே கூறியுள்ளார். இந்த வியப்பினைத் தம்மளவில் துய்க்க விரும்பவில்லை. இக்காட்சியினைப் புலவர், பெருநற்கிள்ளியின் தந்தையான தித்தனும் நேரில் தன் கண்களால் காணவேண்டும் என்று எண்ணுகின்றார். எண்ணிய எண்ணத்தை வெளிப்படவும் தம் பாட்டிலும் இணைத்துவிட்டார். இதோ பாருங்கள்,

நல்கினும் நல்கா னாயினும் வெல்போர்ப்
போரருந் தித்தன் காண்கதில் அம்ம!

என்னும் அவரது உணர்ச்சிமிக்க அடிகளே. இங்ஙனம் பாடிய புலவருக்கு ஓர் ஐயம் உள்ளத்தில்உண்டு. தித்தன் தன் மகனது போர் குறித்து உவப்பனோ உவக்கமாட்டானோ என்பதே அவ் ஐயம். காரணம் தந்தைக்கும் மகனுக்கும் ஏற்பட்ட பகைமை. அங்ஙனம் இருந்தும் தித்தன் காணவேண்டும் என்பதே புலவரது உள்ளக் கிடக்கை.

போரவைக் கோப்பெரு நற்கிள்ளியின் தோற்றப் பொலிவும் போர்த்திறனும், பெருங்கோழி நாய்கன் மகளார் நக்கண்ணையார் என்னும் பெயரிய மாதராரைக் காதலிக்கவும் செய்துவிட்டன. இவனது தோற்றப்

பொலிவினையும், வீரச் சிறப்பையும், 'அடிபுனை தொடு கழல் மைஅணற் காளை' என்று இவ்வம்மையாரே சிறப்பித்திருக்கின்றனர். இத்தொடரின் பொருள், 'வீரத் தண்டை அணிந்த கரிய மீசையையுடைய காளை போன்ற வீரன்' என்பது.

நக்கண்ணையார் புலவரும் ஆவார். இவ்வம்மையாரின் புலமை இச்சோழனைக் காதலித்துப் பாடிய மூன்று பாடல்களால் அறியவருகின்றது. இப்பாடல்கள் வழியே நக்கண்ணையார் கோப்பெரு நற்கிள்ளியைக் காதலித்தனர் என்பது தெரிகிறது. இவ்வம்மையார் இவன் மல்லனெடு பொருதபோது, மறைந்து நின்று அக்காட்சியினைக் கண்டு களித்தனர். அவன்மாட்டுக் கொண்ட காதல் காரணமாகத் தம் உடம்பு பொன்னிறம் போலத் தேமல் பரவும் நிலையினையும் உற்றனர். இதனை இவ்வம்மையாரே, 'யாமே, புறஞ்சிறை இருந்தும் பொன்அன் னம்மே' என்று பாடியிருப்பதால் அறிகிறோம். தேமல் நிறம் பொன்னிறம் ஆதலின், 'பொன் அன்னம்மே' எனப்பட்டது. இவ்வம்மையார் தம் மேனி தேமல் படரும் நிலையில் மட்டும் இன்றிக் காதலால் மெலிந்து, வளைகள் கழலும் நிலையினையும் உற்றனர். தாம் காதலித்த சோழனைப் போர்க்களத்திலே சென்று தழுவலாம் என்றும் எண்ணினர். ஆனால், அவ்வாறு செய்தற்கு அஞ்சினர். அவ்வச்சம் அங்கிருந்த அவையினர் என்னவென்று கூறுவரோ என்பதனால் எழுந்த அச்சமாகும். இதனையும் இவ்வம்மையார், 'அடுதோள் முயங்கல் அவைநா ணுவலே' என்று தம் பாடலில் குறிப்பிட்டிருப்பதால் உணரலாம். தம் வளை கழன்றது குறித்துத் தாய் என்னகூறுவளோ என்றுகூட இவ்வம்மையார்

அஞ்சியுள்ளனர் என்பதும் அறியவருகிறது. 'தொடி கழித் திடுதல் யான்ஆய் அஞ்சுவல்' என்ற அடியைக் காண்க.

உலகம் பலவிதம். ஒருமித்த கருத்தைக் காணுதல் அரிது. இந்நிலையினைக் கோப்பெரு நற்கிள்ளியின் வாழ்க்கையில் காணலாம். இவன் மல்லனொடு பொருதான்; வெற்றியையும் பெற்றான். இவ்வெற்றி குறித்து ஒரு சாரார், இவனது வெற்றி அன்று என்றும், மற்றொரு சாரார் இவனது வெற்றிதான் என்றும் கூறினர். இதனை 'ஆடு ஆடு என்பர் ஒருசாரார்; ஆடு அன்று என்பர் ஒருசாரார்' என்றதனால் அறிக. ஆடு என்னும் மொழி வெற்றி என்னும் பொருளைச் சுட்டி நிற்கின்றது. இவ் வம்மையார்தம் கருத்து, அவன் வென்றான் என்பதே. அதனைத் தாம் நேரில் கண்டதாகவும் கூறுகிறார். 'யான் கண்டனன் அவன் ஆடாகுதலே' என்ற அடியினைக் காண்க.

இவ்வாறெல்லாம் நக்கண்ணையார் பாராட்டி என்ன பயன்? கோப்பெரு நற்கிள்ளி இவரை மணந்தான் என்ற குறிப்பை அறிதற்கு இல்லை. இவ்வம்மையார் அவனைக் காதலித்த குறிப்புத்தான் பெறப்படுகின்றதே அன்றி, அவன் இவ்வம்மையாரை விரும்பிய குறிப்புக் காணப்படவில்லை.

'என்னே! காவற்பெண்டு என்ற தலைப்பில், மற்றொன்று விரித்தல் என்ற வகையில், போரவைக் கோப்பெரு நற்கிள்ளியின் சிறப்பே பேசப்பட்டதே!' என்று கருதவேண்டா. காவற்பெண்டின் சிறப்பினை முற்ற முடிய உணரவேண்டுமானால், கோப்பெரு நற்கிள்ளி

யைப்பற்றித் தெரிந்தே ஆகவேண்டும். இவனது வெற்றிக்கும், வீரத்திற்கும், உடற்பொலிவிற்கும் இவ்வம்மையார்தாம் காரணர் எனில், அஃது உண்மையாகுமே அன்றி, வெறும் புகழ்ச்சி ஆகாது.

இவ்வம்மையார் வீரக்குடி மரபினர். அம்மரபினர் என்பதை இவரது பாட்டே அறிவித்துக்கொண்டிருக்கிறது. அப்பாட்டில் வீர உணர்ச்சி மிக்க உரைகளே பொருந்தியுள்ளன. இவரது பாட்டிற்குத் திணைவகுத்த புறநானூற்று உரையாசிரியர், 'ஏருண் முல்லை' என்று குறிப்பிட்டுள்ளனர். "ஏருண் முல்லையாவது, 'எதிர் இல்லாதபடி ஆண்மைத்தன்மை மேன்மேல் ஏறுகின்ற குடி ஒழுக்கத்தினை உயர்த்திச் சொல்லுதல்' என்பதாம். 'மறம் கனலும் ஏருண்குடி' என்பர் புறப்பொருள் வெண்பாமாலை என்னும் நூலின் ஆசிரியர். இத்தகைய வீரக்குடியில் தோன்றிய காவற்பெண்டு தாம் பாது காத்து வந்த கோப்பெரு நற்கிள்ளிக்கு இளமை முதற் கொண்டே வீரத்தையும் ஊட்டி வளர்த்திருப்பர் அல்லரோ? உடல் வளத்தையும் உணர்ந்து வளர்த்து வந்திருப்பர் அல்லரோ? ஆகவே, இவ்வம்மையாரின் வளர்ப்பின் சிறப்பே கோப்பெருநற்கிள்ளியின் வெற்றிச் சிறப்பிற்குக் காரணம் என்பதில் ஐயம் உண்டா? இல்லை.

பிள்ளைகளின் போக்கிற்குத் தாய்மார்களே காரணம் என்பது பண்டும் இன்றும் உணர்ந்துவரும் ஓர் உண்மையாகும். சிவாஜி மன்னர் பெருவீரராய் விளங்கியதற்குக் காரணம், அம்மன்னர் தம் குழந்தைப் பருவத்தில் வளர்க்கப்படும்போதே இராமாயண, பாரதக் கதைகளைக் கேட்டு வந்த பயனே ஆகும். அக்

கதைகளில் பேசப்படும் இராமனது வீரம், அருச்சுன னது வெற்றிச் சிறப்பு ஆகியவைகளே சிவாஜி மன்ன ரைப் பெருவீரராகச் செய்தன. இன்றுகூடச் சப்பான் நாட்டில் தம் பிள்ளைகளுக்கு வீரர்களுடைய வரலாறு களேயே பெரிதும் தாய்மார் கூறித் தம் பிள்ளைகளை வீரர்களாகத் திகழச் செய்கின்றனர் என்பது வரலாற்று உண்மை. ஆகவே, காவற்பெண்டு கோப்பெரு நற் கிள்ளியை வளர்த்தமையால்தான் அவன் வீரனாய்த் திகழ்ந்தான்.

இனி இவ்வம்மையார் புலவர் என்பதனையும், வீரக் குடியினர் என்பதையும் அறிவோமாக. இவ்வம்மை யார் பாடியதாக ஒரே பாடல் புறநானூற்றில் காணப் படுகிறது. அப்பாடலின் பொருட் செறிவையும் இனிதின் நுகர்வோமாக.

இவ்வம்மையாரின் இல்லம் போந்த ஒருவனோ ஒருத்தியோ இவர்தம் இல்லின் தூணைப் பிடித்துக் கொண்டு, 'அம்மையீர்! உங்கள் மகன் யாண்டுளன்?' என்று வினவ, அதுபோது இவ்வம்மையார் விடுத்த விடை 'என் மகன் எங்குளன் என்று வினவு கிறாய்? அவன் எங்குளன் என யான் அறியேன். என்றாலும், அவன் இருக்கும் இடத்தை ஒருவாறு என்னால் அறிவிக்க இயலும். அதாவது அவனைப் பெற்ற வயிறு இது. அவனைக் காண விழைந்தால் போர்க்களத்திற்குச்சென்றால் காணலாம். அங்குத்தான் அவன் தோன்றுவான்' என்பதாம். இங்ஙனம் கூறும் போது, தன் மகனது வீரத்தை ஓர் உவமை கூறி அறி வித்ததை நாம் பாராட்டாமல் இருக்க இயலாது. அதாவது, தம் மகனைப் புலியாக உவமிக்கிறார்; தம்

வயிற்றை அப்புலி கிடந்த மலைக்குகையாகக் கூறுகிறார். இனி இவ்வம்மையார் பாடிய பாட்டைப் பாருங்கள். அப்பாட்டு,

*சிற்றில் நற்றூண் பற்றி, நின்மகன்*
*யாண்டுளனோ?என வினவுதி; என்மகன்*
*யாண்டுளன் ஆயினும் அறியேன் ஓரும்;*
*புலிசேர்ந்து போகிய கல்அளை போல*
*ஈன்ற வயிறோ இதுவே;*
*தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே,*

என்பது.

இப்பாட்டைப் படிக்கும்போது இவ்வம்மையார், திருமணம் முடித்து, இல்லறத்தை மேற்கொண்டு, பிள்ளைப் பேற்றையும் பெற்று வாழ்ந்தவர் என்பது தெரிகிறது. இல்லை என்றால், 'என் மகன் யாண்டுளன் ஆயினும் அறியேன்' என்றும், 'ஈன்ற வயிறோ இதுவே' என்றும் கூறி இருப்பரோ? இரார். தொழிலும் புரிந்துகொண்டு, கவி பாடும் புலமை மிக்க கவிஞராயும் இருந்த இவ்வம்மையாரை நாம் போற்ற வேண்டும். இவ்வாறு போற்றுதலும் பாராட்டுதலும் மட்டும் போதா. நாமும் எத்தொழிலைச் செய்தாலும் எந்நிலையில் இருந்தாலும், நன்கு கற்றுக் கவி பாடும் திறமை பெற்றுப் பேரும் புகழும், சீரும் சிறப்பும் கொண்டு பெருவாழ்வு வாழ்தல் வேண்டும்.

---

# 12. அழகைத் துறந்த அணங்கு

அழகு என்பது ஒரு பண்பு. இதனை எய்த விழை யாதவர் எவரும் இலர். இது செயற்கை அழகு, இயற்கை அழகு என இரு பாலாகி இயலும் என்ப. இயற்கை அழகு எய்தப்பெறுதவர் செயற்கை எழிலை யேனும் சேர்க்க விழைவர். இத்தகைய அழகை ஆண் பெண் என்னும் இருபால்களுள் பெண்பாலரே மிகுதியும் பெற்றவர். அஃது அவர்கள்பால் இயற்கையில் அமைந்த ஒரு தனி இயல்பு. அதனுலேயே அவர் மாதர் என்னும் மாபெரும் சொல்லாலும் குறிக்கப்பெறுவார் ஆயினர். மாது என்னும் குற்றுகரச் சொல், மாதர் என்னும் ஈற்றுப் போலிச் சொல்லாக அமைந்து வழங் கப்படுகிறது. மாது என்பது அழகு என்னும் பொரு ளுடைய சொல்லாகும். 'மாதர் பிறைக் கண்ணி' என் னும் ஆட்சியைக் காண்க. ஆகவே, மாதர்கட்கே இயற்கையில் அமைந்த அழகினைத் துறத்தல் என்ருல், அஃது எத்துணைச் சீரிய குணமாக இருக்கவேண்டும் என்பதைச் சிந்திக்கவேண்டாவோ? அவ்வாறு துறந்த தூய்மையர் யாரேனும் உளரோ எனில், உளர் என் பதை உணர்த்தவே இக்கட்டுரை எழுந்ததென்க.

நால்வகை மரபினருள் வணிகர் ஒரு மரபினர். இம் மரபினருள் பெருங்குடிப் பிரிவினர் ஒரு வகையினர். இப்பெருங்குடி மரபில் தனதத்தனுர் என்னும் தன வந்தர் தோன்றி இருந்தார். இவர் தொல்பதியாகிய காரைக்கால் என்னும் ஊரில் கண்ணியமாய் வாழ்ந்து வந்தனர்.

காரைக்கால் வணிகர், பொதுவாகத் திரைகடல் ஓடியும் திரவியம் தேடும் திருவினர்; மானமிகு தருமத்தின் வழிநிற்பவர்; வாய்மையில் ஊனமில்லவர். இவர்கள் நம் வாணிபத்தைப் பெருக்கக் கடல் கடந்து செல்வதும் மீளுவதும் ஆய செயலை மேற்கொண்டவர்கள்.

காரைக்கால் நகரில் வாழ்ந்த தனதத்தனார் தமக்குத் திருமடந்தை தோற்றம்போல் ஒரு பெண் மகவு தோன்றியது. அம்மகவைப் பாராட்டிச் சீராட்டி வளர்த்து, புனிதவதி என்னும் பெயரைச்சூட்டி அழைப்பார் ஆயினர். அம்மகவும் பொங்கிய பேர் அழகுமிகு புனிதவதியார் எனத் திகழ்ந்தார். புனிதவதியார் தெய்வங்களால் காக்கப்பட்டுச் செங்கீரையாடி, சப்பாணி கொட்டி, தாலும் ஆட்ட, முத்தம் ஈந்து, வருகை பயின்று, அம்புலி அழைக்க, அம்மானையாடி. ஊசல் பயின்று, நீராடும் நிலையும் அடைந்து வளரலாயினர். இவ் இம்மை ஆட்டங்களுடன் அம்மைக்குரிய ஆட்டத்திலும் பயிற்சி பெற்று வந்தனர். 'வண்டல் பயில் வனஎல்லாம் வளர்மதியம் புனைந்த சடை அண்டர்பிரான் திருவார்த்தை அணைய வருவன பயின்று வந்தார். இவ்வாறு இவ்வம்மையார்தம் இளமைப் பருவத்தில் பயின்று வந்ததை நினைவில் கொண்டே பின்னல் தாம் பாடிய அற்புதத் திருவந்தாதி என்னும் நூலின் முதல் பாடலிலேயே,

> பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதற்
> சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்

என்று பாடி மகிழ்ந்துள்ளார். அப்பாட்டின் குறிப்புக் கொண்டே பாவலர் பெருந்தகையார் சேக்கிழாரும் அம்

மாதரசியாரின் இளமை நிகழ்ச்சிகளைப் பாடிக் களித்துள்ளார்.

இவ்வாறு அறிவாலும் திருவாலும் உருவாலும் சிறந்த புனிதவதியார் கன்னிப்பருவத்தையும் கவினுறப் பெற்றனர்.

புனிதவதியார் மணப்பருவம் உற்றதைப் புலவர், 'இல்லிகவாப் பருவம்' என்று இயம்பி இருப்பது, நம் நாட்டு மாதர்களின் பண்பை விளக்குவதோடு, நாகரிக முறையையும் எடுத்துக் காட்டுவதாகும். தனதத்தனார் திருமகளார் மணப்பருவம் உற்று மாண்புற விளங்குவதைக் கேள்வியுற்ற நிதிபதி என்னும் பெயரிய வணிகர் தம் தனயனுக்கு அந்நங்கையை மணமுடிக்க எண்ணம் கொண்டார். அதனைப் பேசி முடிக்கப் பேரறிஞர்கள் சிலரைக் காரைக்காலுக்கு அனுப்பினார்.

வந்த முதியோர்களும் தனதத்தனாரும் மண மக்களது குணம் பேசிக் குலம் பேசிக் குறித்த நாளில் கடிமணம் இயற்ற முடிவும் செய்தனர். மண விழவு, குறிப்பிட்ட மங்களநல் ஓரைதனில், புனிதவதியார் தமக்கும் பரமதத்தன் தனக்கும் தெளிதருநூல் விதிவழியே செய்து முடிக்கப்பட்டது. இம்மணவினையைக் கண்டு கேளிரும் கிளைஞரும் நனிமிக மகிழ்ந்தனர். புனிதவதியார் மயில் போலும் பரமதத்தன் காளை போலும் விளங்கினர். இந்த முறையில் இம்மணமக்கள் விளங்கித் திருமணம் முடிக்கப்பெற்றனர் என்பதைச் சேக்கிழார் பெருமானார்,

**தளரடிமென் நகைமயிலைத் தாதவிழ்த்தார்க் காளைக்குக்**
**களிமகிழ்சுற் றம்போற்றக் கல்யாணம் செய்தார்கள்**

என்றே குறிப்பிடுகிறார். அம்மையார் மென்மைத் தன்மைக்கும் இளஞ்சாயலுக்கும் மயில் உவமை மிக மிகப் பொருத்தமுடையதே. அன்னணமே தோற்றப் பொலிவுக்கும் பீடு நடைக்கும் பரமதத்தனுக்குக் காளை உவமை சாலவும் தக்கதே. ஆனால், ஈண்டுச் சேக்கிழார் தாம் கூறிய உவமையில் இப்பொருத்தமே அன்றி, ஏனையதொரு பொருட் பொருத்தமும் செறியப் பாடியுள்ளார் என்றே யாம் நினைக்க வேண்டியிருக்கிறது. அருண்மொழித் தேவர் புனிதவதியார் வரலாற்றை நன்கனம் தெரிந்தவர். இம்மணவாழ்க்கை பின்னால் எங்ஙன்ம் இயங்கப்போகிறது என்பதையும் அவர் நன்கு அறிந்தவர். ஆதலின்; இவ்வுவமையின் மூலம் பின்னர் நடக்க இருக்கும் நிகழ்ச்சியை முன்னர் நாம் அறியவேண்டியே மேலே கண்ட உவமையைக் கூறினார். மயில் பறவை இனத்தைச் சார்ந்தது. காளை விலங்கு ஈட்டத்தைச் சேர்ந்தது. புள்ளும் விலங்கும் பொருந்துதல் கூடுமோ! அவை பொருந்தி வாழ்தல் என்பது முயற்கொம்பே அன்றோ? அதுபோலவே, பரமதத்தனுக்கும் புனிதவதியார்க்கும் நடந்த கடிமணம் பொருத்தமற்றது. 'இவர்கள் பின்னால் பொருந்தி வாழும் நிலையினைப் பெறுதவர் ஆவர்.' என்பதை உவமை முகத்தால் விளக்கி வைத்தார், தெய்வப்புலவர் சேக்கிழார் பெருமானார். பொருந்தி வாழும் இயல்புஇவர்கள்பால் இருந்திருக்குமேல் புலவர், பால் பொருத்தம் அமையக் காளைக்கும் இளமணநாகிற்கும் என்றேனும், பெடை மயிலுக்கும், சேவல் மஞ்ஞைக்கும் கடிமணம் நடந்ததென்று செய்யுள் செய்து இருப்பர். இவ்விரு மணமக்களுக்கு நடந்த திருமணம் வாழ்க்கையில் பொருத்தமற்றதாக இருக்

தமையின் காளைக்கும் மயிலுக்கும் மணம் நடந்ததாகக் கூறினர்.

தனதத்தர் பெருந்தனிகர். புனிதவதியார் அவர் குடிக்கு அரும் புதல்வி. அவர் இவ்வொரு மகவன்றி வேறு மகவு பெறாதவர். ஆதலின், தம் அருமை மக ளாரை அகன்றிருக்க மனங்கொண்டிலர். என்றாலும், தம் அணிமாடத்தில் தம்பதிகள் வதியவும் எண்ணங் கொண்டிலர். பின் யாது செய்தனர்? தம் மருமகனார் பொங்கொலி நீர் நாகைக்கும் போகாவண்ணம், தம் பதியின் மாடே, அணிமாடம் தனித்தமைத்துப் புத் தகம் புகும் விழாவும் இனிது நடத்தி, அங்கு வாழ ஏற்பாடு செய்தனர். இதுவே அறிவுடைச் செல்வர் ஆற்றும் செயலாகும். இவ்வாறே கோவலன், கண் ணகியை மணந்த பின்பு அத்தம்பதிகள் தனித்து வாழவே இருசார் இருமுது குரவர்களும் நேர்ந்து, அத் தம்பதிகளை மனையறம் இயற்ற ஏற்பாடு செய்தார்கள் எனச் சிலப்பதிகாரம் செப்புகின்றது.

புனிதவதியார் பரமதத்தன் உடன் கூடி இல் லறத்தை இனிது நடத்தலானார்; துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும் துணையாய் இருந் தனர். இவ்விரு தம்பதிகள் தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் ஆகியோர்க்குத் தம் கடன்களை ஒழுங் காக நடத்தி வந்தனர்; இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நற்றுணையாய் இருந்தனர். இம்முறை யில் பாங்கில் வரும் மனையறத்தின் பண்பினின்று வழாது இவர்கள் வாழ்வாராயினர். ஆனால், புனித வதியார் மட்டும் உம்பர்பிரான் திருவடிக்கீழ் உணர்வு மிக ஒழுகினார்.

'உத்தியோகம் புருட லட்சணம்' என்பது முதுமொழி. ஆகவே, பரமதத்தன் காரைக்காலில் அங்காடி ஒன்று, அழகுடன் அமைத்துப் பொருளீட்டி வந்தனன். ஒருநாள் இவனது நண்பர் சிலர் இவனைக் காண அங்கு வந்து சேர்ந்தனர். நண்பர், பெரியோர், குழந்தைகள், தெய்வம் ஆகிய இவர்களைக் காணச் செல்வோர் வெறுங்கையுடன் செல்வது முறையன்று. ஏதேனும் ஒன்றைக் கையுறையாகக்கொண்டு செல்லுதல் மரபு. அம்முறையில் பரமதத்தனைக் காணவந்தவர்கள் மாங்கனி இரண்டை மணங்கனிந்து கொணர்ந்து ஈந்தனர். கனி பெற்ற காளையாம் பரமதத்தன், அவற்றை இல்லத்துச் சேர்க்க ஏற்பாடு செய்து தன் பணியின்மீது ஊக்கமாய் இருந்தனன்.

இந்நிலையில் ஓர் அடியவர் பசிமிக உடையராய் உணவில் மிகு வேட்கையராய்ப் புனிதவதியார் அகம் புகுந்தனர். வந்த விருந்ினரை அம்மையார் விருப்புடன் வரவேற்றனர். திருவடிகளை விளக்க நீரைத் திருத்தமுற முன்னளித்தார்.

'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்'

ஆதலின், அற்றார் அழிபசி தீர்க்கப் பரிகலம் திருத்தி இன்னடிசில் படைத்திட்டார். விருந்தினர் வந்த வேளை திருவமுது செய்திருக்கக் கறியமுது மட்டும், அட்டு அமையா அற்றமாக அமைந்திருந்தது. என்றாலும், அம்மையார் உள்ளம் அசைந்திலது. அறிவுடையார் எல்லாம் உடையார் அல்லரோ? 'இல்லது என் இல்லவள் மாண்பானால்?' ஆகவே, இல்லாளன் அனுப்பிய நல்ல மாங்கனிகள் இரண்டில் ஒன்றை அடியவர்க்கு இனிதாகப் படைத்திட்டார். விருந்தினர்

உண்டு மகிழ்ந்த இன்முகங் கண்டு அம்மையாரும் ஈத்துவக்கும் இன்பத்தில் திளைத்திட்டார். வந்த விருந்தினரும் அம்மையாரை வாழ்த்திச் சென்றனர்.

பரமதத்தன் உற்ற பெரும் பகலின்கண் ஓங்கிய பேர் இல் புகுந்தனன். பொற்புற நீராடினன். உடனே நேரே அடிசில் அகம் புகுந்து உணவுண்ணத் தொடங்கினன். உணவு கொள்ளுதற்கு முன்பு பரமதத்தன் செய்த செயல்கள் இவைதாம் என்பதைச் சேக்கிழார் குறிப்பிட்டனர். ஈண்டுப் பரமதத்தன் பண்பாட்டைப் படம் பிடித்துக் காட்டுகிறார் பாவலர். பரமதத்தன் நீராடிய பின்பு பூசுவன பூசிப் போற்றுவன போற்றும் பொறுப்பு அற்றவன் என்பது நீராடியதும் நேரே உணவுகொள்ளப் புக்கமையிலிருந்து ஆணித்தரமாக விளங்குகிறது. ஆகவே, அன்னன் இயல்புக்கும் அம்மையார் பண்புக்கும் எத்துணை வேற்றுமை காணக்கிடக்கிறது! இதனால் அவனைக் காளைக்கு உவமையாகக் கூறியது பொருத்தமன்றோ?

பரமதத்தன்முன் பரிகலம் திருத்திப் புனிதவதியார் உணவு பரிமாறினர்; அடியவர்க்கு இட்டபின் எஞ்சி இருந்த மாங்கனியைப் பரிகலத்தில் வைத்தனர். கணவரும் மகிழ்வுடன் உண்டலைக் காண நுண்ணிதின் மகிழ்ந்தது ஒண்ணுதல் முகனும். பரமதத்தன் மனைவியார் படைத்த மதுரமிக வாய்த்த மாங்கனியைச் சுவைத்தான். அச்சுவையை மேலும் சுவைக்க 'இனையதொரு பழம் இன்னும் உளது. அதனையும் இடுக' என இயம்பினன். பழம் சுவையாயிருந்தது. அச்சுவையைத் தன் வாழ்க்கைத்துணைவியும் துய்க்கவேண்டுமென்று எண்ணினன் அல்லன் காளை வணிகன். 'தோன்றற்கும்

தோமைக்கும் ஒன்றாய் வரும் இன்ப துன்பங்கள்' என்பதைச் சிறிதும் சிந்தித்திலன். புள்ளினங்கட்கும், விலங்கினங்கட்கும் தம் துணையிடத்து வைத்த அன்பு தானும் இவன்பால் இல்லைபோலும் !

'துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறு'

'அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ரால்ஆற்றும் புறவு'

'இன்னிழல் இன்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலை'

என்று அன்றோ கற்றோர் ஏத்தும் கலி கழறுகிறது ?

'சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
பிணைமான் இனிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
கள்ளத்தின் ஊச்சும் சுரமென்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி'

என்று அன்றோ ஐந்திணை ஐம்பது அறைகிறது ? இதன்றோ அன்பின் மாட்சி! இப்பண்பாடு இவன் பெற்றிலன் என்பதை விளக்க அன்றோ இவனைக் காளை என்றார் கவிஞர்.

புனிதவதியார் அதுபோது யாது செய்தார் ? 'பெண்டிர்க் கழகு எதிர்பேசா திருத்தல்' என்னும் சீரிய கொள்கையராய், அனையதொரு மாங்கனியைக் கொண்டு வர அணைவார்போல் உள் புக்கார். உற்ற இடத்து உதவும் பரமனை உளத்துக்கொண்டு பரவினார். இறை அருளால் ஒரு மாங்கனி அவ்வம்மையார் அங்கையில் வந்துற்றது. அதனைக் கொணர்ந்து அன்புடன்

கொண்கனார்முன் படைத்தனர். அதனையும் சுவைத்த பரமதத்தன், 'இது முன் தந்த மாங்கனியன்று. இதன் சுவை முன்னையதினும் விஞ்சி நிற்கிறது. இஃது ஏது? உண்மையினை ஒளியாமல் உரைக்கவும்' என்று உசாவினான்.

அம்மையார் ஈண்டு இன்னது செய்வதென்றுணரா ராய், இடர்க்கடலில் இடர்ப்படுவாரானார். 'அருளுடை யார் அளித்தருளும் செவ்விய பேர் அருள்' என்று விளம்பவும் விதுப்புற்றார். நடந்தவண்ணம் நவிலவும் நடுங்கினார். இவ்வாறு இருபால் கவர்வுற்று இடை யூசல் ஆடி ஒருபால் படாமல் இருந்து, கற்புநெறி கடவாத காரிகையார் ஆதலின், செய்தபடி சொல்லு வதே கடன் என்று நடந்தவற்றை நடந்தவண்ணம் நவின்றிட்டார். நடந்தவற்றைக் கேட்டும் வணிகன் அமைதியுறவில்லை. தெய்வத் திருவருளில் ஐயம் கொண்டான். 'மாதே! நீ ஈசன் அருளால் மாங்கனி பெற்றது வாய்மையானால், மற்றொரு கனியையும் வர வழைப்பாயாக. இன்றேல், நின்னுரையை யான் ஏற் கேன்' என்றனன்.

பரமதத்தனைப்போல் புனிதவதியார் ஈசன் அருளில் ஐயம் கொள்ளும் நெஞ்சம் வாய்ந்தவர் அல்லர். இறை வன் அருளில் என்றும் உறுதியும், உறைப்பும் உடை யவர். உள்ளே சென்றார். வேண்டுவார் வேண்டுவதே ஈயும் வேணிப்பிரானை உளத்தமைத்து, 'உற்ற இடத்து உதவும் உத்தமரே! மற்றொரு மாங்கனியை ஈங்களித்து அருள்வீராக. இன்றேல், என்னுரை பொய்யாம்' என்று வேண்டிநின்றார். அல்லல் தீர்த்து ஆளவல்ல ஆண்ட வன் அருளால், மற்றுமொரு மாங்கனி அம்மையார்

கையில் வந்துற்றது. அதனைத் தம் கணவர்தம் கையகத்து இட்டுக் களித்தனர். அதனை வணிகன் நயப்புடன் நோக்குகையில், அஃது அவன் கையினின்று கரந்து ஒழிந்தது. கைக்கனி கரக்கவே, காளையாம் வணிகன், அச்சமும் நடுக்கமும் அகத்துக்கொண்டான். அக்கணமே அம்மையார் ஓர் அணங்கு என்று உளத்துள் உன்னினன். மனைவி என்பதை மறந்தும் போனான். 'இனி இம்மாதுடன் வாழ ஒருப்படேன்' என்று உளத்தில் கொண்டவனாய், ஒருவும் எண்ணமே ஓங்க இருந்தான். நடந்த செயலை எவர்க்கும் நவின்றானும் அல்லன்.

திரைகடல் ஓடித் திரவியம் தேடும் வழக்கமுடைய மரபினைச் சார்ந்த வணிகன் ஆதலின், அதனையே ஏதுவாக அகத்துள் கொண்டு 'பரவைமீது படர்கலம் செலுத்திப் பணத்தைத் தேடப்போகின்றேன்' என்று பாவையார்க்குப் பகர்ந்து வங்கம் ஏறி வழிக்கொள்ளலானான். புனிதவதியாரும் கணவர் புகன்றது பொய்யுரை அன்று. மெய் உரையே என்று உளத்துக் கொண்டு உத்தரம் கொடுத்தனர்.

வேலையைக் கடந்து வேற்று நாட்டகம் விரைந்து சென்ற வணிகனும், வாணிகம் செய்து செல்வம் பலவும் சேரத் திரட்டித் திரும்பினான். செல்வம் திரட்டிய பரமதத்தன், காரைக்காலுக்குள் கால் வைக்கவும் கூசினான்; அச்சமும் கொண்டான். ஆகவே, காசுடன் சென்று கன்னி நாட்டினை அண்மினன். அடைந்தவன் யாது செய்தனன்? வாளா இருந்தனனோ? இல்லை. திரட்டிய செல்வத்தை நிதி சேமிக்கும் இடத்தில் உய்த்தனன். 'பொருள்தனைப் போற்றி வாழ்' என்னும்

பொன்னுரைக்கிணங்கத் தான் ஈட்டிய பொருள் வளர்தலின்றி வாளா இருக்க ஒருப்படாதவனாய், அது வட்டி ஈன்று வளர நிதி சேமிக்கும் இடத்தில் உய்த்தான் போலும்! அவ்வாறு செய்தான் என்பது 'ஒப்பில்மா நிதியம் எல்லாம் ஒருவழி பெருக உய்த்து' என்னும் அடி விளக்குகிறது. இதனால் இக்காலத்துப் பாங்கு (Bank) என்பதையே புலவர் ஒருவழி என்று குறித்தனர் போலும். செல்வப் பெருக்கிற்குச் செய்ய வேண்டிய செயலைப் புரிந்த வணிகன், தன் வாழ்க்கையை இன்புடன் கழிக்க, ஆண்டே தன் குலத்தைச் சார்ந்த நலந்தரு நங்கை ஒருத்தியை நன்மணம் புரிந்தனன். மணம்புரிந்த தன் பயனாக மகவொன்றும் பெற்றெடுத்தான். பெற்ற மகவுக்குப் புனிதவதி என்ற திருப்பெயரையே வைத்திட்டான். பரமதத்தன் மகவுடனும் மனைவியுடனும் மனம் மகிழ்வு கொண்டு பாண்டியநாட்டில் பண்புற வாழலானான்.

இங்ஙனம் இவ்வாறாகப் புனிதவதியார் கணவனார் வருகை நோக்கித் தம் கற்புநெறி கடவாது வாழ்ந்து வந்தனர். கணவர் கன்னி நாடெய்திக் கன்னி ஒருத்தியை மணந்து களிப்புடன் வாழ்வதைச் சிறிதும் அறியார் அம்மையார். ஒரு நாள் இன்றேனும் பல நாள் சென்றபின்பு உண்மை வெளியாதல் ஒருதலை. பரமதத்தன் செயல் பரவலாயிற்று. அவனது செயலைக் கேட்ட அம்மையாரின் கிளைஞர் சிறிதும் தாமதியாது நேரே அவனைக் காணக் கன்னி நாடடைந்தனர்; உண்மை உணர்ந்தனர். எனினும், அவனுடன் உரையாடலராய், மற்றவன் இருந்த பாங்கர் நற்றிருவனைய நங்கையை நண்ணுவிப்பதுவே கடன் என்று முடிவு

செய்தனர். மடநடை மயில் அன்னாரை மாமணிச் சிவிகை ஏற்றி, பாண்டியநாட்டை நோக்கிப் புறப்படலாயினர். அம்மையார் இளமை மாறா இன்னழகுடையர் என்பதைச் சேக்கிழார், 'தாமரைத் தவிசில் வைகும் தனித்திரு' என்னும் தொடரால் குறிப்பது, இத்தகையாருடன் இன்பம் துய்க்கவேண்டிய இந்நிலையில் பரமதத்தன் ஒருவிச்சென்றது அடாதது என்பதை அறிவிக்கவே ஆகும். சுற்றமும் நட்பும் சூழ யாவரும் கன்னி நாட்டை அணுகினர். தம் வருகையைப் பரமதத்தனுக்கு ஆள் போக்கி அறிவித்தனர்.

புனிதவதியாரின் வருகை கேட்ட வணிகனும் பரமதத்தன் இடியேறுண்ட நாகம்போல இடரில் வைகினான். 'இதற்கு என் செய்வ ?'தென்று ஏங்கினான். மணந்த மனைவி இருக்க மறுமணம் கொண்டது மாசு ஆயிற்றே' என்று மயங்கினான். பிறகு ஒருவாறு தேறி, 'நேரே சென்று புனிதவதியார் பொன்னடி பணிந்து போற்றுதல் செய்வோம்' என்று முடிவு கொண்டான். கோயில் வழிபாட்டைப் போற்றும் கொள்கையுடையன் போலக் குளித்து முடித்துத் தூய ஆடையும் துலங்க அணிந்துகொண்டான். மனைவியையும் மகவையும் அவ்வாறே செய்துகொள்ளவும் கட்டளை இட்டனன். பின்பு மூவரும் நடந்து புனிதவதியாரைக் காணப் போந்தனர்.

செம்மையில் தம் கணவனும், கணவரோடு காரிகை ஒருத்தியும், காரிகையோடு நல்ல கவின்தரு மகவும் வருவதைப் புனிதவதியார் கண்ணுற்றார். அம்மையார் பார்த்த பார்வை நேரிய பார்வையன்று. மருண்ட பார்வை, அச்சப் பார்வை; அவலப் பார்வை. 'என்னே ! என்னை நீத்து வேறொரு மங்கையை மணந்து,

மகவும் பெறும் காரணம்! யான் அத்துணை தீங்கு யாது செய்தேன் ?' என்று எண்ணி உள்ளம் துடிக்கப் பார்த்தனர். ஆதலின், அப்பார்வையோடிருந்த அவ் வம்மையாரை 'மாலிளம் பிணைபோல் நிறை மனைவி யார்' என்று பாவாணர் இசைத்தார்.

இவ்வாறு மருட்சிகொண்ட மாதர்களுக்கு மானின் கண்களை உவமை கூறுவது மாபெரும் புலவர்க்கு வாய்ந்ததொரு பண்பாகும். திருஞானசம்பந்தர் இளைய கோலத்துடன், முதுமை நிறைந்த பலரோடு பாண்டி யன் அவைக்களத்து வீற்றிருக்கையில், அம்முதியவர்க ளால் பாலுருவாயர்க்கு ஏதேனும் இடுக்கண் நிகழுமோ என்றெண்ணினார் மங்கையர்க்கரசியார். இவ்வம்மை யாரது அகத்து எண்ணத்தை முகத்தால் அறிந்த தோணிபுரத் தோன்றலார் அவ்வம்மையாரை நோக்கி,

'மானி னேர்விழி மாதராய்
வழுதிக்கு மாபெருந் தேவிகேள்
பானல் வாய்ஒரு பாலன் ஈங்
கிவன்என்று நீபரி வெய்திடேல்'

என்று பாடினார். இதுநிற்க.

மருட்சியுற்ற பார்வையோடிருந்த மங்கையர் தில கத்தின் மலரடி முன்னே பரமதத்தன் தன் பின்னைய மனைவியுடனும் மகவுடனும் வீழ்ந்து, 'அம்மையீர்! யான் உமதருளால் வாழ்வேன். இவ்விளங் குழவிதானும பான்மையால் உமது நாமம் தாங்கிய வாழ்வுடைய தாகும்' என்று பணிமொழி பகர்ந்து எழுந்தான். கணவர் வணங்குவதைக் கற்புடை மனைவியார் ஏற்பரோ? மனைவி கணவனைத் தொழுதெழுவாள் என்பதே தமிழரது மரபு.

ஈண்டுப் பரமதத்தன் செயல், புறக்கணித்தற் குரியதே. இவ்வணக்கத்தைப் புனிதவதியார் ஏற்றிலர் என்பதைச் சேக்கிழார் பெருமானுர்,

'கணவர்தாம் வணங்கக் கண்ட
காமர்பூங் கொடிய னாரும்
அணைவுறுஞ் சுற்றத் தார்பால்
அச்சமோ டொதுங்கி நிற்க'

என்று பாடி அறிவிக்கின்ருர். ஈண்டுக் 'காமர்பூங் கொடியனுர்' என்று புனிதவதியாரைப் புகன்றதனுல், காற்று மோதக் கலங்கும் கொடிபோலக் கணவர் வணங்கக் காரிகையார் கலங்கினுர் என்பது உன்னற் குரிய உட்பொருளாகும்.

பரமதத்தனது செயலைக் கண்ட உறவினர் வெள் கினர் ஒருபால்; வியப்புற்றனர் மற்றொருபால். 'மனமலி தாரினுய்! நீ மருள் ஏறப் பெற்றனையோ? உன் திரு மனைவிதன்னை வணங்குவ தென்கொல்?' என்று உசா வினுர். 'உறவின்முறை உத்தமர்களே! யான் மருள் உற்றேன் அல்லேன். தெருளே உற்றுளேன். இம் மாதரசியார் மானிடர் அல்லர். நற்பெருந் தெய்வம். நான் அறிந்தேன். பெற்ற இம்மகவுக்கு யான் இவ் வம்மையார் பேரும் இட்டேன். ஆதலாலே, பொற் பதம் பணிந்தேன். நீங்களும் போற்றுதல் கடமை யாகும்' என்று கழறினுன். இவ்வாறு பரமதத்தன் கூறக்கேட்ட உறவினர்கள் உணர்த்துவதும் உணரு வதும் இன்ன என இயலாதவராய் வாளா இருந்தனர்.

இவற்றை எல்லாம் ஆழ அழுந்த நோக்குங்கால் பரமதத்தனும் புனிதவதியாரும் கொண்ட மணம் எத்

துணைப் பொருத்தமுடையது என்பதைச் சிந்திக்க வேண்டாவோ? அச்சிந்தனையின் முடிவு யாதாக முடியும்? இது பொருந்திய மணம் அன்று; பொருந்தா மணமே என்பதுதானே போதரும்? அதனை முன் கூட்டி அன்றே தொண்டர்சீர் பரவும் தோமில் புலவர், 'தளிரடிமென் நகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக் களிமகிழ் சுற்றும்போற்றக் கல்யாணம் செய்தார்கள்' என்று உவமை முகத்தால் உணர்த்திக் காட்டினார்?

கணவரின் சொல்லையும் செயலையும் கூர்ந்து நோக்கினார் புனிதவதியார். புனிதவதியார் அகத்து அழகுடையார் போலப் புறத்தும் அழகுடையவர். அருண்மொழித்தேவர், அம்மையாரைக் குறிக்கும்போ தெல்லாம் அம்மையாரது கவின் பொலியவே கவியும் பாடுகிறார். 'திருமடந்தை அவதரித்தாள் எனவந்து, பொங்கியபேர் அழகுமிகப் புனிதவதியார் பிறந்தார்' எனப் பிறப்பைப்பற்றி மொழிந்தார் முன்னே. 'அணி கிளர் மெல்அடி' என்று திருவடியைப் புனைந்தனர். 'அழகின் கொழுந்து எழுவதென வளர்வார்' என்று வளர்ப்பை வரைந்தார். 'நுசுப்பு ஒதுங்கு பதம்' என்று இடையின் அழகை இயம்பிப் போந்தார்; 'நல்லஎன உறுப்பு நூலவர் உரைக்கும் நலம் நிரம்பி மல்கு பெரு வனப்புமிக் கூரவரு மாட்சி' என உறுப்பழகு அனைத் தினையும் ஒருங்கே உரைத்திட்டார். 'தளிரடி மென் னகை மயில்' என்று சாயல் அழகைச் சாற்றி முடித் தார். 'பூப்பயில்மென் குழல் மடவார்' 'மணமலியும் மலர்க்கூந்தல் மாதரார்' 'பூங்குழலார்' என்று கூந்தல் சிறப்பைக் கூறிப்போந்தார்.

இவ்வாறு உருவும் திருவும் ஒருங்கே அமையப் பெற்ற இவ்வம்மையார் கணவருக்கு உகந்தது ஆகாத வாழ்வை உடனே வெறுத்தார். தமக்கு அமைந்த வனப்புப் பிறர் மகிழ இன்றிக் கணவருக்கென அமைந்ததென்று எண்ணி, 'இவருக்காகத் தாங்கிய வனப்பு' என்று கூறி அதனை எள்ளி, 'இறைவா, இத் தசைப் பொதி கழித்துப் பேய் வடிவு அடியேனுக்குப் பாங்குற அளித்தல் வேண்டும்' என்று பரவி நின்றார். அம்மையார் எண்ணிய எண்ணியாங்கு வானமும் மண்ணும் எல்லாம் வணங்கும் பேய் வடிவம் உற்றார். இதனால் இவ்வம்மையாரை 'அழகைத்துறந்த அணங்கு' என்று கூறுதல் பொருத்தம்தானே?

அம்மையார் நிலையைக் கண்ட ஒக்கலும் நட்பும் பரமதத்தன் கூற்றை உண்மை என்று உணர்ந்தனர். அவர்களும் தொழுது இறைஞ்சி அகன்றுபோனார். அம்மையார் கருவிலே திருவுடையார் ஆதலின், அப் பொழுதே இறைவன்மீது பாடவும் தொடங்கினார்.

'பிறந்தமொழி பயின்றபின் எல்லாம் காதற்
சிறந்தநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே!
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்.

என்பது முதலாக நூறு பாடல்களைப் பாடினார். அதுவே 'அற்புதத் திருவந்தாதி' என்பது. இத்துடன் இரட்டைமணிமாலை என்னும் இருபது பாடல் அடங்கிய நூலையும் பாடி, இறைவன் இருந்த கைலை நோக்கித் தலை அன்பால் தலையால் நடந்து செல்வாரானார். இவரது வருகையை இமயவல்லி இனிதுற நோக்கி இறைவ

னிடம் 'எற்பின் யாக்கை யன்பு இருந்தவாறு என்னே!' என்று வினவ, பரமன், 'உமையே, இவ்வரை இவரும் இவள், நம்மைப் பேணும் அம்மை. இப்பெருமைசேர் வடிவும் நம்மை வேண்டியே பெற்றதாகும்' என்றருளிச் செய்யப் புனிதவதியாரும் அருகே அண்மினர். ஆலமர் செல்வனும் 'அம்மையே வருக!' என்ருன். இறைவன் தாயும் இலி; தந்தையும் இலி; தான்தோன்றித் தம்பி பிரான். ஆதலின், அவனுக்கு 'அம்மையே!' என அழைக்கும் வாய்ப்பு இதுகாறும் அமைந்திலது. புனித வதியார் கைலை புக்கபோதுதான் இப்பேறு அவனுக்குக் கிடைத்தது. ஆகவே, ஈண்டே இறைவன் தனயன் என்னும் தனிப்பெருமையுற்ருன். புனிதவதியார் மணந் தும் மகப்பெரு நிலையில் வாடிய வாட்டம் தீர, இறை வனே தம்மை அம்மை என்றழைக்கும் தாய்ம்மைப் பண்பையும் தாங்கலாயினர். இக்கருத்தினைச் சிவப் பிரகாசர் தம் திருவெங்கை யுலாவில் வெளிப்படுத்திக் காட்டிவிட்டார்.

—எவர்க்கும்இவன்
தந்தையே அன்றித் தனயன்ஆ காதவன்காண்
அந்தமில்சீர்க் காரைக்கால் அம்மைதனை—
முன்னொருநாள்
தப்பா அருளால் தனக்கம்மை என்றவன்காண்'

என்பன அவ்வடிகள்.

இறைவன் அம்மையாரை 'எது வேண்டுமோ, அது வேண்டுக' என்று விளம்பப் புனிதவதியாரும்,

'இறவாத இன்ப அன்புவேண் டிப்பின்
வேண்டு கின்ருர்
'பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல்
உன்னை என்றும்

மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டும்நான்
மகிழ்ந்து பாடி
அறவாநீ ஆடும்போதுன் அடியின்கீழ்
இருக்க' என்ருர்'

இறைவரும் இவ்வரங்களை ஈந்ததோடு நில்லாது, 'திருவாலங்காடென்னும் திருப்பதியில் நீ சென்று எம் ஆனந்தக்கூத்தினைக் கண்டு அகங்களிக்கப் பாடுவாய்' என்றும் பணித்திட்டார். அப்பணி தலைமேற்கொண்டு அம்மையார் தலையால் நடந்து திருவாலங்காடடைந் தார்; அண்டமுற நிமிர்ந்தாடிய ஆனந்த நடனம் கண்டார்; அகத்தானந்தம் புறத்துப் பொழிவது போல், மூத்த திருப்பதிகம் மொழிந்திட்டார். இவர் பாடிய நூல்களே பின் வந்த புலவர்கள் பரணி பாடு தற்குப் பெருந்துணை செய்தன என்று கருதவேண்டி உளது. இவர் பாடல்கள் அலகை யாட்டங்களையும், இடு காடு. சுடு காடு இயல்புகளையும் இனிது எடுத்து இயம்பவல்லன. இவையே அதற்குக் காரணம். இவ் வம்மையாரது திருப்பாடல்கள் சைவத்திருமுறை பன் னிரண்டனுள் பதினோராம் திருமுறையில் இலகும் பெருமையுடையன.

இவ்வம்மையார், புனிதவதியார் என்று தம்மைத் தாம் பாடிய பாடல்களில் குறித்துக்கொள்ளாமல், யாண்டும் 'காரைக்காற் பேய்' என்று குறிப்பிடுவ தால், அம்மையார் பேய் வடிவு பெற்றதை ஐய மின்றி அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

சுந்தரரும் இவ்வம்மையாரைப் 'பேயார்' என்றே குறித்துள்ளார். அம்மையார் தம்மைக் காரைக்காற் பேய் என்று குறிப்பதனுல், இவர் காரைக்காற் பதியில் பிறந்தார் என்பதும் அறியக்கிடக்கிறது.

அழகைத் துறந்த அணங்காம் புனிதவதியார் என்னும் காரைக்காற் பேயார் ஆளுடைய பிள்ளையார்க்கு முற்பட்டவர். இதனைத் தொண்டர்சீர் பரவுவார் தம் திருத்தொண்டர் புராண வாயிலாகத் தெளிவுபடுத்திக் கூறியுள்ளார். புகலி வேந்தர் வாக்கும் இக்கருத்துக்கு அரண் செய்கிறது. ஞானபோனகர் தமது தலயாத்திரையின்போது, தொண்டை நாட்டைத் தொழுதுகொண்டு வருகையில், திருவாலங்காட்டிற்குச் சென்று அண்டமுற நிமிர்ந்தாடும் ஆலங்காடனைவழுத்த அப்பதி நோக்கி வந்தனர். அப்பதி அம்மையாம் காரைக்காற் பேயார் தம் கால்கொடு நடவாது தலைகொடு நடந்து சென்று போற்றப்பட்டதை அறிந்து, அப்பதியைத் தம் காலால் மிதிக்க அஞ்சிப் பக்கத்தில் இருந்த ஒரு சிற்றூரின்கண் தங்கினர். இந்நிகழ்ச்சிகளைக் கவிஞர் பெருமான் சேக்கிழார் குறிப்பிடுகையில்,

இம்மையிலே புவியுள்ளோர் யாவருங் காண
ஏழுலகும் போற்றிசைப்ப எம்மை யாளும்
அம்மைதிருத் தலையாலே நடந்து போற்றும்
அம்மையப்பர் திருவாலங் காடாம் என்று
தம்மையுடை யவர்மூதூர் மிதிக்க அஞ்சிச்
சண்பைவருஞ் சிகாமணியார் சாரச் சென்று
செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர்
செழும்பதியில் அன்றிரவு பள்ளி சேர்ந்தார்

என்று பாடி விளக்கினர்.

இன்னணம் தோணிபுரத் தோன்றலார் செழும்பதியில் தங்கி அன்றைய இராப்போது உறங்குங் காலத்தில், அவ்வுறக்கத்தின்கண் உமையொரு பாகனார்

எழுந்தருளி, 'நம்மை அயர்ந்தனையோ பாடுதற்கு ? என்று நினைவுறுத்தித் தூண்டுவாராயினர். இதனைத் திருஞானசம்பந்தரே,

துஞ்ச வருவாரும் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரும் முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள்கொள் ளும்வகைகேட்
டஞ்சும் பழையனூர் ஆலங் காட்டெம் அடிகளே

று பாடி அறிவிப்பார் ஆயினர்.

இதில், 'நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும்' என்று குறிப்பிடப்பட்டது, ஆலங்காட்டப்பர் ஆளுடைப் பிள்ளையாரின் கனவில் கூறிய 'நம்மை அயர்ந்தனையோ பாடுதற்கு?' என்பதைத் தெள்ளென வெளிப்படுத்துவதாகும். இவ்வருள் பாட்டின் பொருளை நன்கு உணர்ந்தே தொண்டர் சீர் பரவுவா ராம் தொல்லாசிரியர், சீர்காழிச் செம்மல் திருவாலங் காட்டுக்கு எழுந்தருளிய விதத்தின் சிறப்பியல்பினைத் திறம்பட இயம்பலானார். இக் குறிப்பினின்று பாலறு வாயர் பரமனார் பதியாம் திருவாலங்காட்டை மிதிக்க அஞ்சிக் கோயில் புகாது அயலே தங்கியதற்கு அம்மை யார் சென்னியால் நடந்த பதி என்பதே காரணம் என்பது புலனாகிறது. இதனால் புனிதவதியாராம் காரைக்கால் அம்மையார் தமிழ் விரகராம் திருஞான சம்பந்தருக்கு முற்பட்டவர் என்பது ஐயம் திரிபற அறியக்கிடக்கின்றது அன்றோ ?

மேலும், தோணிபுரத்தோன்றலார் சிறுத்தொண்ட நாயனாரால் வரவேற்கப்பட்டு நன்முறையில் உபசரிக்கப் பட்டார் என்பது ஞானபோனகம் உண்டார் வரலாற்றி

லும், சிறுத்தொண்டர் வரலாற்றிலும் சேக்கிழ பெருமான் செம்மையுறச் செப்பியுள்ளார்.

சிறுத்தொண்டரது இயற்பெயர் பரஞ்சோதிய என்பது. இவர் முதலாம் நரசிம்மவர்ம பல்லவ மன்னிடம் தானைத் தலைவராய்த் திகழ்ந்தவர். இவர் த மன்னன் பொருட்டு கி. பி. 7 ஆம் நூற்றாண்டில திகழ்ந்த சாளுக்கிய மரபு மன்னனை இரண்டாம் புலிக்கேசியை வெல்ல, வாதாபி நகர்க்குப் படை எடுத்துச் சென்று வெற்றி கொண்டதைச் சரித்திரம் சாற்றுகின்றது. இதனால் சிறுத்தொண்டர் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டு என்பது வெள்ளிடை மலை யென விளங்காநிற்கிறது. சிறுத்தொண்டருடன் தொடர்பு கொண்ட தண்டமிழ் விரகராம் திருஞான சம்பந்தர் நிலவிய காலமும் கி. பி. ஏழாம் நூற்றாண்டு என்பதில் எள்ளளவும் ஐயமின்று. ஆகவே, அழகைத் துறந்த அணங்காம் புனிதவதியார் காலம் பாலரு வாயரது காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்பது, அங்கையில் நெல்லிக் கனியென அறியக்கிடக்கிறது.



Printed at Sri Bharathi Press, Choolai, Madras-7